ஸ்ரீ ராமானந்தபாரதி ட்ரஸ்ட் வெளியீடு.

உ

|| श्रीः ||

# வேதாந்த தீபம்

(ப்ரஹ்மஸூத்ர சங்கரபாஷ்யத்தின் ஆங்கில முன்னுரை)

புரீ பஸ்சிமாம்னய ஸ்ரீகோவர்த்தன பீடாதிபதி

ஜகத்குரு

ஸ்ரீ பாரதீகிருஷ்ணதீர்த்த ஸ்வாமிகள்



தமிழ் மொழிபெயர்ப்பாளர் :

பரமஹம்ஸ ஸ்ரீ ராமானந்தபாரதி

ஸ்ரீரங்கம்

1975

|| ஸ்ரீ: ||

சுவாமி எழுதும் புத்தகங்களெல்லாம் தருமத்திற்கே ஆனதால், இந்த புத்தகத்தை விலைக்கு வாங்கி மனனம் செய்யவும்.

சுவாமி ராமானந்தபாரதி,
ஸ்ரீ சங்கர குருகுலம்,
ஸ்ரீரங்கம், திருச்சி – 6.



ஸ்ரீ தக்ஷிணும்நாய சிருங்ககிரி ஸ்ரீ சாரதாபீடாதிபதி ஜகத்குரு
ஸ்ரீமத் அபிநவவித்யாதீர்த்த மஹா ஸ்வாமிகள்

உ

# श्री शृङ्गेरी जगद्गुरु महासंस्थानम्, शारदापीठम्

शृङ्गेरी — कडूर् कर्नाटक स्टेट्

**PRIVATE SECRETARY**
to His Holiness The Jagadguru
Mahaswamigalavaru of Sringeri Math
Sarada Peetham
P. O. Sringeri (Kadur) 577139
Karnataka State.

*Camp :* Kavelam, Goa.

*Date :* 19—12—75

ஸ்ரீ ராமானந்தபாரதீ அவர்களுக்கு,

*நமஸ்காரம். தங்கள் 1—12—75 கடிதமும் தங்களால் தமிழில் அனுவாதம் செய்யப்பட்ட 'வேதாந்த தீபம்' புஸ்தகமும் கிடைக்கப்பெற்று ஸ்ரீ ஸ்ரீ மஹாஸந்நிதானம் அவர்களின் பாதகமலங்களில் சமர்ப்பிக்கப்பட்டன. நீங்கள் இவ்வளவு சிரமம் எடுத்துக்கொண்டு, எல்லோருக்கும் பிரயோஜனமாக இருப்பதற்காக இதை எழுதியதில் சந்தோஷம்.*

*தங்கள்*

GIRIDHARA SASTRI



புரீ கோவர்த்தன பீடாதிபதி

ஜகத்குரு ஸ்ரீ பாரதீகிருஷ்ண தீர்த்த மஹா ஸ்வாமிகள்

॥ श्रीः ॥

॥ श्रीगुरुभ्यो नमः ॥

பிரஸ்தானதிரயங்களில் இரண்டாவதான ப்ரம்மசூத்திரம் மஹரிஷி வேதவியாஸரால் எழுதப்பட்டது. அதற்கு ஆதிசங்கர பகவத்பாதாள் உலகிற்கே உத்தமமான பாஷ்யம் (உரை) எழுதியுள்ளார்.

இந்த பாஷ்யத்தை பல வியாக்யானங்களுடன் மஹாமஹோபாத்தியாய பிரம்மஸ்ரீ அனந்தகிருஷ்ண சாஸ்திரிகள் தனது ஸம்ஸ்கிருத முகவுரையுடன் 1933ல் மூன்று பாகங்களாக வெளியிட்டார்.

புரீ பஸ்சிமாம்னய ஜகத்குரு ஸ்ரீகோவர்த்தன பீடாதிபதிகளான ஸ்ரீஸ்ரீஸ்ரீ பாரதீகிருஷ்ணதீர்த்த ஸ்வாமிகள் ஆங்கிலத்தில் 56 பக்கங்களெழுதிய முன்னுரையும் இந்நூலில் சேர்க்கப்பட்டுள்ளது.

இம்மாபெரும் முன்னுரையில் அவ்வான்றோரதுசொல்திறம், கம்பீர ஸித்தாந்தம், பல பாஷைகளைக் கற்ற சிறப்பு, மேனாட்டு தத்துவ ஞானிகளுடன் ஒத்துப்பார்த்தல், கணிதமாமேதையின் அறிவு, விஞ்ஞான நுட்பம் இன்னும் பல காணப்படுகின்றன.

அந்த மகானின் கீழ் 1953 பிரயாகை கும்பமேளாவில் பொதுகாரியதரிசியாகப் பணி செய்யும் பாக்கியம் கிட்டிற்று.

ஆங்கிலத்தின் நுட்பங்களறியாத நண்பர்களின் வேண்டுகோளுக்கிணங்க இந்த அரிய வேதாந்த தீபமான முன்னுரை தமிழில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது.

மொழிபெயர்ப்பு ஒரு திரடான வேலை. இரு பாஷை களில் வல்லமை வேண்டும். தவிர ஸ்ரீ சங்கராசார்யாரது நறுமணம் குறையாமலிருக்கவேண்டும். இந்த தூயவேலையில் குருவை தியானம்செய்து, ஒவ்வொருநாளும் 8 மணிகள் வேலைசெய்து, 5 நாட்களில் ஸ்ரீரங்கம் ஸ்ரீசங்கர குருகுலத்தில் (1975) உத்தராயண முடிவுக்குள் எடுத்த பணி இனிது நிறைவேறியது.

இக்குருகுலத்தில் வேதாந்த வித்வானாக இருக்கும் ஆப்த நண்பர் ப்ரஹ்மஸ்ரீ K. S. வெங்கடராம சாஸ்திரிகளிடம் முதல்முதலாகப் படிக்கப்பட்டது.

குருநாதர் ஸ்ரீ ஜகத்குரு சிருங்ககிரி தக்ஷிணாம்னாய பீடாதி பதிகளின் பரிபூர்ணானுக்ரஹத்துடன் வெளிவருகிறது.

வேதாந்த சோலையினுட் புகும் எல்லா தமிழர்கட்கும் இது கலங்கரை தீபமாகுக.

ஸ்ரீ சங்கர குருகுலம்,
ஸ்ரீரங்கம், திருச்சி-6.
15—7—75.

நாராயணஸ்மரணம்,
रामानन्दभारती,
ओं.



மஹரிஷி ரமணர்

( 1879 to 1950 )



ஸ்ரீ ராமாநந்தபாரதீ,

ஸ்ரீரங்கம்

|| श्रीः ||

# வேதாந்த தீபம்

## (பிரஹ்மஸூத்ர பாஷ்யத்தின் முன்னுரை)

---

हौत्राग्निहोत्राग्नि हविष्यहोतृहोमादि सर्वाकृतिभासमानम् ।
यद्ब्रह्म तद्बोधवितारिणीभ्यां नमो नमः श्रीगुरुपादुकाभ्याम् ॥

उद्धारार्थं मुमुक्षोररचिषत पुरा ब्रह्मसूत्राणि यानि
कृष्णद्वैपायनेन श्रुतिपरमतिनाऽऽम्नायशीर्षार्थवक्त्रा ।
कृत्वा भाष्यं तदीयं निखिलबुधनुतं गूढतत्त्वोपदेष्टा
निर्द्वैतानन्ददायी जगति विजयते शङ्करो देशिकेन्द्रः ॥

பூமண்டலத்தில் ஒவ்வொரு பகுத்தறிவுள்ள மனிதனுள்ளும் கீழ்க்கண்ட பிரச்னைகள் எழாமல் இருக்க முடியாது. கடோபநிஷத்தில் கூறியபடி (अस्तीत्येके नायमस्तीति चैके) "நான்" என்பது பிறக்குமுன் இருந்ததா, அல்லது இல்லையா? இருந்தால் எங்கு, எப்பொழுது எப்படி நான இருந்தேன? எங்கிருந்து வந்தேன்? இப்பொழுது நான் யார்? இறக்கும பொழுது நான் என்பது மிஞ்சுமா? அப்படி மிஞ்சினல் எது, எங்கே, எப்படி? எங்குபோவேன்? எனது இறுதி லக்ஷ்யமென்ன? என்னவிதமாக அந்த லக்ஷ்யததை அடைவேன்? விவேகிக்கும் மடையனுக்கும் இதே வித்தியாசம், விவேகி சதா படித்து சிந்தனம் செய்து, புனர் விசாரணைபண்ணி ஒரு பிரச்னையில் அதன் சூக்ஷ்மத்தை அறியும்வரை சதா தியானத்திலிருப்பான். மந்தபுத்தி யுள்ளவனே மனேசக்தியும் விசாரிக்கும் தீக்ஷண்யமுமில்லாததால், களைப்புற்று நம்பிக்கை

இழக்கிருன். ஆனல் இதில் யாதொரு சந்தேகமுமில்லே, புத்திசாலியும் மூடனும் மேற் கூறிய பிரச்னேகளேப் புறக்கணித்ததில்லே. விசாரணே முடிவுதான் இருவருக்கும் வித்தியாசம்.

## விசாரணே அவசியமே

எல்லா மனிதர்களும் தீரப்படித்து, கவனமாக ஆராய்ச்சி செய்து சரியாக தீர்மானம் செய்வதும் அவசியமே, ஏனெனில் எங்கு செல்லவேண்டுமென்று தெரியாதவரை மார்க்கத்தை அறியமுடியாது, எந்த முயற்சிகளால் போய்ச்சேருவோமென்பதும் துலங்காது. நாம் எதாயிருந்தோம், நாம் யார், நாம் எவ்வகையில் திருந்தவேண்டும், எப்படி இந்த மாறுதலேப் பெறுவது? இம்மாதிரி பிரச்னேகளுக்கு நாம் உத்தரம் கண்டு பிடிக்காவிடில் நமக்கு மனச்சாந்திகிட்டாது. இவ்வித மான பிரச்னேகளே ஆராய, முதல் முதலாக ஆத்மாவின் குணங்கள், தன்மை முதலியவைகளேக் கண்டுபிடித்தே, ஆகவேண்டும். எனவே, இந்த முன்னுரையில் எந்த கோணங்களிலிருந்து ஆராயவேண்டும், இறுதியில் அந்த தீவிரமான ஆராய்ச்சி எங்கு கொண்டுபோய் விடுமென்ற பகுதிகளே விவரிப்போம்.

சரியான அஸ்திவாரத்திலேயே ஒரு பலமான வீடு கட்ட முடியுமாதலால், முதலில் ஆத்மா எக்காலமும் உளது என்பதை தத்துவ சாஸ்திர ரீதியிலும் விஞ்ஞான முறையிலும் சரியென்று ஸ்தாபிக்க வேண்டும். ஸ்ரீமத் பாகவதத்தில் சொல்லியபடி (न शयानः पतत्यधः — கீழே படுத்தவன் விழுவதில்லேயே. மேலே ஏறுகிறவனுக்கே கீழே விழும் பயம், உயர ஏற ஏற கீழே விழும் ஆபத்து அதிகரித்து, எலும்புகளும் முறிந்து உயிருக்கே ஆபத்தும் வரலாம். ஆகவே, ஒரு வாதத்திலிருந்து மற்றென்றுக்கு ஏறும்பொழுது அல்லது ஒரு படியி லிருந்து மற்றெரு படி ஏறும்பொழுதோ, அஸ்திவாரம் பலமா என நிச்சயம் வேண்டும்.

ஆகவே ஆத்மா, ஈசுவரன், ஜகத் இவைகளின் சம்பந்தங்களை சாஸ்திர ரீதியாகவும், தத்துவ நிர்ணய மூலமாகவும், மனோதத்துவ ரீதியாகவும் தனித்தனியே ஆராயவேண்டும். அத்ருஷ்டவசமாக, தத்துவ சாஸ்திர ஆராய்ச்சியும் விஞ்ஞான பரிசீலனையும் ஒரே முடிவிற்கு இழுக்கின்றன. எங்கெங்கு இருமுறைகளும் ஒன்ருகப்படுகிறதோ, அவைகளை இரண்டையும் சேர்த்தே சுருக்கமாக ஆராய்வோம்.

## பிரமாணம்

முதலாவதாக, ஆராயவேண்டியது—ஏது ப்ரமாணம் என்பது. ஐம்புலன்களாலுணருவதே (प्रत्यक्ष) பிரமாணம் என்ருல் அது சரியல்ல—கேவலம் இவ்வுலகிய ப்ரகிருதியை நிச்சயம்பண்ணவே, ப்ரத்யக்ஷ ப்ரமாணம் உதவுகிறதில்லை. உதாரணமாக, யார் தனது அன்னை (பிதா விஷயம் மற்ருெருபுரம்) என்பதை நிர்ணயிக்கக்கூட, ஐம்புலன்களாலியலவில்லை.

ப்ரத்யக்ஷத்துடன் அனுமானம் சேர்ந்தாலும் பயனில்லை. எல்லோருக்கும் அன்னையுண்டு. ஆதலால் நமக்கும் ஒரு அன்னை இருக்கவேண்டும் என்பதைத் தான் அனுமானத்தால் தீர்மானிக்க முடியும். ஆனுல் பல பேர்களில் யார் நமது அன்னை என்பதை அனுமானத்தினுல் தீர்மானிக்கமுடியாது.

அடுத்தபடியாக (शब्द) சத்யத்திலும் அன்பிலும் ஈடுபட்டோரது வார்த்தையாலோ எழுத்தாலோ மனோநிலையை ஒட்டியோ தீர்மானிக்கலாம். இதர உலகங்கள் முன்பின் ஜன்மங்கள் முதலிய, ப்ரகிருதிக்கப்பாலுள்ள விஷயங்களை ஸ்தாபிக்க நம் புலன்களும் அனுமானமும் மட்டும் போதா.

ஆகவே நமது சாஸ்திரங்கள் கூறுவதாவன,

[1]नावेदविन्मनुते तं बृहन्तम् ।

வேதவித்தில்லாதவன், அந்த் பெரியதை உணர முடியாது.

[2]मातृमान्पितृमानाचार्यवान्पुरुषो वेद ।

முறையே எவன் அன்னை பிதா, ஆசாரியர் மூலம், கற்ருனே, அவனுக்குத்தான் தெரியும்.

[3]तं त्वौपनिषदं पुरुषं पृच्छामि ।

வேதாந்தம் மூலம் அறியக்கூடிய புருஷனை நான் கேள்வி கேட்கிறேன்

[4]शास्त्रयोनित्वात् ।

சாஸ்திரமே பிரமாணமாயிருப்பதால் அவை மூலமே அறியப்படவேண்டும்.

[5]उपदेक्ष्यन्ति ते ज्ञानं ज्ञानिनस्तत्त्वदर्शिनः ।

எந்த மேதாவிகள் இந்த திவ்ய ஞானத்தை அடைந்து ஸ்வானுபூதியுடனுளரோ அவர்கள் உனக்கு போதிப்பார்கள்.

தனிப்பட்ட விசாரம்

இதனல் இந்த பிரச்னைகள் மூடநம்பிக்கையால் அறியக்கூடியவையல்ல. பகுத்தறிவு, யுக்தி வாதங்கள் முதலியன மூலமே அறியப்படவேண்டும்.

நமது சாஸ்திரங்கள் சந்தேகமன்றி தெளிவாகக் கூறுகின்றன.

[6]श्रोतव्यो मन्तव्यो निदिध्यासितव्यः ।

---

1. யஜுர்வேதம். 2. பிருஹதாரண்யகம்.
3. பிருஹதா 3-9-26. 4. பிரஹ்மஸூத்ரம் 1-1-3.
5. கீதை 4-34. 6. பிருஹதாரண்யகம் 2-4-5.

சுவாநுபூதியுடன் கூடிய குருவிடம் படி. உன் பகுத்தறிவால் ஆராய்ச்சி செய். அதற்குப்பின் மூனந்து தியானம் செய்து, அதை உனதாக அறிந்து தினசரி வாழ்க்கையிலீடுபடு.

यस्तर्केणानुसंधत्ते स धर्मं वेद नेतरः ।

எவன் படித்து சீர்தூக்கி புத்தியாலும் யுக்தியாலும் மனனம் செய்கிருனே அவனுக்கே தருமநெறி புரியும்.

[7]तद्विद्धि प्रणिपातेन परिप्रश्नेन ।

சாதகனுக்கு விநயமவசியமாதலால் விநயத் துடன் படி. எல்லாக்கோணங்களிலிருந்தும் சம்சயங் களையும் நிரடுகளையும் கேள்விகளால் தீர்த்துக்கொள்.

சத்திய சோதனை

வைதிகமான ஸனாதன தர்மத்தில் பாரபக்ஷமற்ற தீவிர ஆராய்ச்சியால் அறியக்கூடியதே சத்தியம். மற்ற மதங்களும் சத்தியமே பேசு முதலிய தருமநெறிகளடங்கியவனவாயினும், அவைகள் ஒரு வேலிகட்டி உள்ளிருந்து "நான் சொல்லுகிறேன் கேள்" என மூட நம்பிக்கையையே ஆதாரமாக்கு கின்றன. ஸனாதனதர்மமோ, தனது தனிப்பட்ட முறையில் சத்தியத்தாலேயே சோதிக்கப்படவேண்டும் என்கிறது.

सत्यान्नास्ति परो धर्मः ।

சத்தியத்திற்கு அப்பால் ஒரு தருமமுமில்லை.

युक्तियुक्तं वचो ग्राह्यं बालादपि शुकादपि ।
युक्तिहीनं वचस्त्याज्यं वृद्धादपि शुकादपि ॥

யுக்தியுடனுளது பாலர் சொன்னாலும் கிளி சொன் னாலும் ஒத்துக்கொள்ளப்படவேண்டும். யுக்தியற்றது

7. கீதை 4-34,

கிழவர் சொன்னாலும் சுகதேவர் சொன்னாலும் ஒத்துக் கொள்ளக்கூடாது.

ஸ்ரீகிருஷ்ணபகவானும் கீதையில் தனது உபதேசத்தில் சத்தியத்தையும் யுக்தி ப்ரதிபாத்யத்தையும் உத்தம வழிகளாகக்காட்டினார்.

[8]यच्छ्रेयः स्यान्निश्चितं ब्रूहि तन्मे
शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम् ॥

அத்யந்த பிரிய சிஷ்யனான அர்ஜுனன் பகவான் காலில் விழுந்து பிரார்த்திக்கிறான்.

"எது என் க்ஷேமத்திற்கு நலமோ அதை சொல். அடியேன் உனது சிஷ்யன் உன்னை சரணாகதியடைந்த எனக்கு உத்திரவிடு."

காலில் விழுந்தவனுக்கு உத்திரவிடவில்லை. ஆனால் விவரிக்கிறார், உபதேசிக்கிறார், நிரடுகளை நீக்குகிறார். எல்லாக் கேள்விகளுக்கும் பதிலுரைத்து உள் பிரகாசத்தையும் அளிக்கிறார். இப்படி 17 அத்யாயங்களில் விவரித்து இறுதியாக அர்ஜுனனிடமுரைக்கிறார்.

[9]कच्चिदेतच्छ्रुतं पार्थ त्वयैकाग्रेण चेतसा ।
कच्चिदज्ञानसंमोहः प्रणष्टस्ते धनञ्जय ॥

ஏகாக்ரமனதுடன் நான் சொன்னதையெல்லாம் கேட்டாய். பார்த்தா! இப்பொழுது அறியாமை எனும் மாயை உன்னைவிட்டகன்றிருக்கவேண்டும்.

[10]नष्टो मोहः स्मृतिर्लब्धा त्वत्प्रसादान्मयाच्युत ।
स्थितोस्मि गतसंदेहः करिष्ये वचनं तव ॥

உனதருளால், எனது அறியாமை நீங்கிற்று, என் சுய நிலைக்கு வந்தேன்; ஹே அச்யுத, எனது சந்தேகங்களெல்லாம் விலகின.

---

8. கீதை 2-7. 9. கீதை 18-72.
10. கீதை 18-73.

இந்த ச்லோகங்களிலிருந்து கிருஷ்ணருடைய உபதேசத்தால்மட்டுமல்ல, அதை நன்கு விசாரித்தே அர்ஜுனன் மனம் தெளிந்தான் அதாவது ச்ரவண மனன நிதித்யாஸன குருவிடமிருந்து கேட்டல் கேட்டதை மனனம் செய்தல், அதை தைலதாரைபோல் அனுஸந்தானம் செய்தல், இவற்றின் மூலமே ஞானியானான் என்று தெரிகிறது.

## ஸநாதன தர்மம்

ஆகவே, நமது விருப்பு, வெறுப்பு, பிடித்தது, பிடிக்காதது, இவைகளை நீக்கி உண்மையான சத்திய சோதகர்களாக ஈசுவரன், ஜீவாத்மா, ஜகத் இம் மூன்றுக்கும் உள்ள சம்பந்தங்களை ஆராய்வோம். எனவே ச்ரவண சாஸ்திர ச்ரவணத்திலிறங்கி சாஸ்திரங் களில் மற்ற பாகங்களை நீக்கி வேத வாக்கியங்களை கவனிப்போமாயின் ஈசுவரன் ஜீவாத்மா, ஜகத் இவை களுள் வித்தியாசமில்லை என்ற ஒரே ஒற்றுமையைக் காண்கிறோம். திரும்பச் சொல்லின் அவை அத்வைத தத்தையே கோஷிக்கின்றன. இம்மாதிரி ஆயிரம் வாக்கியங்களைப் பொறுக்கலாம். இங்கு சிலவைகளை ஆராய்வோம்.

[11]एको देवः सर्वभूतेषु गूढः सर्वव्यापी सर्वभूतान्तरात्मा ।

எல்லாப் பொருள்களுள்ளும் மறைந்திருப்பது ஒன்றே. எங்குமுளது, எப்பொருளுள்ளுமுளது.

[12]नेह नानास्ति किंचन ।

உண்மையில் ஒரு பொருளுக்கும் மற்றொன்றுக்கும் ஒரு வித்தியாசமுமில்லை.

[13]मृत्योः स मृत्युमाप्नोति य इह नानेव पश्यति ।

இந்த உலகைப் பலவாகப் பார்ப்பவன் கணக்கற்ற ஜனன மரணங்களுக்குள்ளாகிறான்.

11. சுவேதாசுவதரம் 6-11.

12. பிருஹதாரண்யகம் 4-4-19. 13. பிருஹதாரண்யகம் 4-4-19.

14द्वितीयाद्वै भयं भवति ।

மற்ருென்றிருப்பதாலேயே ஒருவனுக்குபயம், கவலை பகைமை, த்வேஷம், முதலிய துக்கங்கள்.

15उदरमन्तरं कुरुते अथ तस्य भयं भवति ।

எவன் ஸ்வல்பமாவது பேதபுத்தியிலீடுபடுகின்ருனே அப்பொழுது பயம் உத்பத்தியாகிறது.

16स यश्चायं पुरुषे, यश्चासावादित्ये स एकः ।

சரீரத்திலுள்ள ஆத்மாவும், சூரியனிலுள்ள ஆத்மாவுமொன்றே.

17सर्वाणि भूतानि आत्मैवाभूद्विजानतः ।

ஸத்யதர்சிக்கு, எல்லாம் அவனது ஆத்மாவே.

18तत्र को मोहः कः शोकः एकत्वमनुपश्यतः ।

எப்பொருளிலும் ஒன்றையே பார்ப்பவனுக்கு, மோகம் எங்கே? சோகம் எங்கே?

19कस्मिन्नु भगवो विज्ञाते सर्वमिदं विज्ञातं भवति ।

எந்த ஒன்றைத் தெரிந்தால் உலகிலுள்ள எல்லாம் அறியப்படுகின்றதோ,

20ईशावास्यमिदं सर्वम् ।

இவ்வுலகமெல்லாவற்றையும் ப்ரஹ்மத்தால் மறைக்கவேண்டும்.

21ऐतदात्म्यमिदं सर्वम् ।

இவ்வெல்லாம், இந்த ஆத்மாவே.

---

14. பிருஹதாரண்யகம் 1-4-2.
15. தைத்திரீயம் 2-7. 16. தைத்திரீயம் 2-8.
17. ஈசோபநிஷத் 7. 18. ஈசோபநிஷத் 7.
19. முண்டகம் 1-1-3 20. ஈசோபநிஷத் 1.
21. சாந்தோக்யம் 6-8.

[22]स आत्मा तत्त्वमसि, श्वेतकेतो ।

ஹே ச்வேதகேது! அவன் ஆத்மா, நீ அதுவே.

இந்த வாக்கியங்களைத்தவிற முக்திகோபநிஷத்தில் பகவான் ஸ்ரீராமசந்திரன் ஸ்ரீ பக்தஹனுமானுக்கு 108 உபநிஷதங்களின் பெயர்களைச்சொல்லி அவைகளின் சாராம்சம் மாண்டுக்யோபநிஷத்திலுளது என்றார்.

[23]माण्डूक्यमेकमेवालं मुमुक्षूणां विमुक्तये ।

முக்தியைத்தேடுவோருக்கு மாண்டுக்ய உபநிஷத் ஒன்றேபோதும் இவ்வுபநிஷத்தின் ஆரம்பம்.

[24]ओमित्येतदक्षरमिदं सर्वं तस्योपव्याख्यानं भूतं भवद्भविष्यदिति सर्वमोंकार एव । यच्चान्यत् त्रिकालातीतं तदप्योंकार एव सर्वं ह्येतद्ब्रह्म अयमात्मा ब्रह्म ॥

"இவ்வுலகமெல்லாம் 'ஓம்' என்ற பிரணவ அக்ஷரமே எது இருந்ததோ இருக்கிறதோ இருக்கப்போகிறதோ அதெல்லாம் ஓங்காரமே. எது மூன்று காலங்களுக்கும் அதீதமோ அதுவும் ஓங்காரமே. ஓங்கார ஸ்வரூபமான இது எல்லாம் ப்ரஹ்மமே இந்த ஆத்மாவும் அதுவே" மாண்டுக்ய உபநிஷத், பின்னர் ஜாகர, ஸ்வப்ந, ஸுஷுப்தி அவஸ்தைகளிலுள்ள ஆத்மாவும் பரமாத்மாவுமொன்றே - ஓங்காரத்துடன் சேர்ந்ததே பரம்பொருள் என்பதை விவரிக்கிறது.

ஸ்வல்ப மந்திரங்களடங்கிய மாண்டுக்யம் எல்லா உபநிஷதங்களிலும் குறுகியது பகவான் ஸ்ரீராமசந்திரன் அதுவே எல்லாவற்றிலு முயர்ந்ததென்கிறார். அது சங்கரபகவத்பாதரின் அத்வைதத்தையே கோஷிக்கிறது. மாண்டுக்யமும் அத்வைதமும் ஒன்றே. ஆகவே

22. சாந்தோக்யம் 6-8. 23. முக்திகோபநிஷத்
24. மாண்டுக்யோபநிஷத்.

மாண்டுக்யத்தில் நம்பிக்கையுள்ளோர் அத்வைதத்தைக் கண்டித்தால் அது ஒன்றுக்கொன்று முரண்பாடே.

ஈசுவரன் எப்படி சிருஷ்டிசெய்தாரென்ற வாக்கியங்களும் இம்மாதிரி ஸ்பஷ்டமே.

[25]सच्च त्यच्चाभवत् ।

அதே பார்க்கப்படுகிறதும் பார்க்கப்படாததுமான உலகமாக ஆனது.

[26]बहु स्यां प्रजायेय ।

அது எண்ணிற்று "பலவாவேன் பலவைகளுள் பிரகாசிப்பேன்" என்று பின் உலகெலாமுண்டாயிற்று.

அது பலவைகளை சிருஷ்டிப்பேன் என்று சொல்லவில்லை. ஆனல் பலவாக ஆவேன் என்றது. அது பலவைகளை வெளிப்படுத்துவேன் என்று சொல்லவில்லை. ஆனல் 'பல உருவங்களில் தென்படுவேன்' என்றது. ஈசுவரன் ஸர்வசக்தன் எனில், ஒரு சொப்புடு வித்தை மோசக்காரனன்று. மோசக்காரனுக்கு மனம் வேறு. மன்னு தொழில் வேறு, மகாமண்டுவானவனுக்கும் இது புரியும். ஈசுவரன் பலவாக எண்ணியவுடன் உலகெலாம் ஏற்பட்டதென்ருல் இவ்வுலகெலாம் பல உருவங்களில் அவரது வெளித்தோற்றமே. அல்லது அவரது ஸர்வசக்தியை மறுத்தால் ஈசுவரனை ஒரு மோசக்காரன் என்றே சொல்லவேண்டும். தர்க்க சாஸ்திரத்தில் மூன்ருவது நிலை கிடையாது.

சம்ஹிதைகளையே ஒப்புக்கொள்ளுவோம். உபநிஷதங்களை ஏற்கமாட்டோம் என்ற நவீன வாதிகளுக்காக கிருஷ்ண-சுக்ல-யஜுர் வேதங்களிலுள்ள புருஷ ஸூக்த மந்திரத்தை ஆராய்வோம்:—

प्रजापतिश्चरति गर्भे अन्तः । अजायमानो बहुधा विजायते ॥

---

25. தைத்திரீயம் 2-6. 26. தைத்திரீயம் 2-6.

சிருஷ்டிகர்த்தா, கர்ப்பவாசத்திலிருக்கிறவரே, பிறப்பில்லாததே பல உருவங்களில் பிறவி. ஸம்ஹிதையையே ஆதாரமாகக்கொண்ட ஆர்யசமாஜ ஸ்தாபகரான சுவாமி தயானந்த சரஸ்வதியும் தனது பாஷ்யத்தில் இந்த வாக்கியத்திற்கு இதே அர்த்தம் கொடுத்திருக்கிறார்.

எல்லோரும் ஒப்பும் - மேனாட்டு தத்துவ ஞானிகளான கார்லைல் எமர்ஷன் முதலியோருட்பட-பகவத் கீதையும், அத்வைதத்தையே ஊர்ஜிதப்படுத்துகிறது. அதிலிருந்து இரண்டு ச்லோகங்கள்.

27 ब्रह्मार्पणं ब्रह्म हविर्ब्रह्माग्नौ ब्रह्मणा हुतम् ।
ब्रह्मैव तेन गन्तव्यं ब्रह्मकर्मसमाधिना ॥

ஹோமம் செய்யும் கருவிகளும் பிரஹ்மம். ஹவிஸ்ஸும் ஈசுவரனே. அக்னியும் ஈசுவரனே. ஹோமம் செய்கிறவனும் ஈசுவரனே. ஹோமமும் ஈசுவரனே. ப்ரஹ்மம் என்ற கர்மாவில் மனதை நிலை நிறுத்தி அடையும் பலனும் ப்ரஹ்மமே எல்லாம் ப்ரஹ்மமே.

28 इदं शरीरं कौन्तेय क्षेत्रमित्यभिधीयते ।
एतद्यो वेत्ति तं प्राहुः क्षेत्रज्ञ इति तद्विदः ॥

क्षेत्रज्ञं चापि मां विद्धि सर्वक्षेत्रेषु भारत ।
क्षेत्रक्षेत्रज्ञयोर्ज्ञानं यत्तज्ज्ञानं मतं मम ॥

சரீரமே க்ஷேத்திரம் எவன் அதை அறிந்து 'இது' எனதென்கிறானோ, அவன் க்ஷேத்திரக்ஞன். எல்லா சரீரங்களிலும் உள்ள க்ஷேத்ரக்ஞன் நானே. க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞன் இவற்றைப் பிரித்தறிவதே உண்மையான ஞானம். இம்மாதிரியே இந்த ச்லோகத்தை ஹரிபிரசாத் வைதிகமுனி (ஆர்யசமாஜ பாஷ்யக்காரர்) அர்த்தம் பண்ணியிருக்கிறார்.

---

27. கீதை 4-24. 28. கீதை 13-1, 2.

## ஏனைய மதங்கள்

ஸனாதனதர்ம சிரவணத்தை மேற்கூறியமாதிரி சுருக்கமாக ஆராய்ச்சி செய்தபின் மனனத்திற்குள் நுழைவோம். முதலில் வைதிகமான அத்வைத விசாரணையை மற்ற மதத்தினர் கொள்கைகளுடன் ஒத்துப்பார்த்து, இரண்டாவதாக தனியாகவும் ஆராய்ச்சி செய்வோம்.

கிருஸ்தவமத பைபிள் இம்மூலாதாரமான ப்ரச்னைகளைத் தீர்க்கவில்லை. அதற்குக் காரணம் பைபிள் குறிப்பிட்ட அதிகாரிகளுக்குக்கொடுத்த கிரந்தமே அது தத்வ நிர்ணயத்திலீடுபடாமல் சில முக்கிய தருமநெறிகளையே உபதேசிக்கிறது. எனினும் சில இடங்களில் அத்வைதத்தையே பிரசாரம் செய்கிறது.

உதாரணம்:—யேசுநாதரே சொன்னார்:

(பரமண்டல) பிதாவின் உலகம் உன்னுள் உள்ளது. நீங்கள் ஈசுவரர்களே.

ஸ்ரீ சாந்த ஜானது (St. John) பாகத்தில் இம்மாதிரி சில வாக்கியங்களுண்டு.

பல கிரேக்க, ரோம, சரித்திர ஆதாரங்களிலிருந்து ஏசுநாதர் இந்தியாவிலிருந்து அத்வைத வேதாந்தத்தை பாலஸ்டீனில் பிரசாரம் செய்தார் என அறிகிறோம். மதவெறிபிடித்த த்வைதிகள் ஏசுநாதரை பாஷண்டர் என பழித்து அவரது கடுஞ்சத்துருக்களாகி ரோமராஜ்ய நியாயஸ்தலத்தில் பாஷண்ட பிரசார குற்றத்திற்காகவும் யூதர்களின் தெய்வங்களை ஒப்பாத குற்றத்திற்குமாக ஏசுநாதரை சிலுவையிலேற்றி உலகமே பழிக்கும் சொற்களுக்கு ஆளானார்கள். அவரது முதல் சீடர்களுள் சாந்த ஜான் மட்டிலுமே ஏசுநாதரது (மறைந்த) தத்துவங்களை அறிந்தவர். பல கிருஸ்தவர்கள் சாந்தஜானது சுவிசேஷத்தைப் புரிந்துகொள்ள முடியாமல் சாந்தமாதியூ, சாந்தமார்க்,

சாந்தல் யூக்கது புத்தகங்களையே படிக்கிறார்கள். அது எவ்வாறாயினும் ஏசுநாதரை நம்பும் பாரபக்ஷமற்ற கிருஸ்தவர்கள் ஏசுநாதர் எதிர்த்த 'த்வைதத்தை' ஏற்கமாட்டார்கள். அவர் மகா தியாகஞ்செய்த காரணமே அவரது அத்வைதத்தாலேயே என்பதை ஏற்பார்கள்.

முகம்மதியருள் ஸூபிக்களெல்லாம் அத்வைதிகளே

## மேனாட்டு தத்துவஞானிகள்

இந்தக் கட்டத்தை சுருங்கக்கூறின் மேனாட்டு தத்துவஞானிகளில் பின் வருவோர் சங்கரரது வேதாந்தத்தை மறுக்கவில்லை. க்ரேக்க ப்ளேடோ. ஸ்வீடன் பர்கு, வார்ட்ஸ்வொர்த்து, ப்ரௌனிங், கார்லைல், எமர்ஸன், பிஷப் பர்க்லி, ஹெகெல், பிக்டே, இம்மானுயேல் கான்டு, ராலப் வார்ட்ஸ், ட்ரைன், தாமஸ் ஹில்க்ரீன், வில்லியம்வாகர் அட்கின்ஸன் எல்லா வீலர் வீல் காக்ஸ் பேராசிரியர் டாய்ஸன் இன்னும் மற்றோரும் சார்வாகரது 'உண்டதே போகம்கண்டதே காக்ஷி' என்ற நிலையைக்கண்டித்து சங்கரரது வேதாந்தத்தை ஆதரித்தனர். ஆனால் மகா மேதாவியான இம்மானுயேல் காண்டு கூட தனது 'சுத்த யுக்தி கண்டனம்' என்ற அரிய நூலில் சங்கரரது அத்வைத நிலை வரை வந்தவராயினும் அந்த முடிவை ஒத்துக்கொள்ள பயந்து வெளிநின்றார். உலகிற்கே தலைசிறந்த மேதாவியான சங்கரரே வேதாந்தம் கொண்டுவிடும் துரீய நிலையில் அஞ்சாநெஞ்சத்துடனும் அஸாதாரண அறிவுடனும் தியானசிகரத்தில் நின்றார்.

[1] தற்கால பாரத சமுதாய நிலையில் இன்றும் உலகிலுள்ள மேனாட்டு தத்துவஞானிகளை ஸ்ரீசங்கரரது அத்வைத வேதாந்தம் கவருகிறது. மகாமேதாவிகளும் சங்கர பாஷ்யத்தை உலகினில் தலைசிகரமான நூலென்றும் சங்கரரை உலகெலாம் மெச்சும் தீர

1. 1933

வேதாந்தியென்றும் சரித்திரத்திலே உதித்த மகாபுருஷர்களுள் ஒரு அத்புதமான புருஷர் எனவும் பாராட்டி வருகின்றனர்.

இனி மனன்-மனனமென்ற இரண்டாவது படியை தத்துவ சாஸ்திர ரீதியிலும் விக்ஞான வழியிலும் ஆராய்வோம். அடுத்த கேள்வி யாதெனில் மேனாட்டு மாமேதைகள் வேதத்தைப் படிக்காமலும் நம்பாமலும் தங்களது வெவ்வேறு விதமான ஆராய்ச்சிகளில் எல்லா நுட்பங்களுமறியாதவராயினும் மொத்தத்தில் சங்கரரது அத்வைதத்தை ஒப்புக்கொண்டதெப்படி? ஒரு பதில் கூறமுடியும். அத்வைத மார்க்கமொன்றே புத்தியும் விஞ்ஞான சாஸ்திரமும் ஒப்பக்கூடியது எனவே மேனாட்டு தத்துவஞானிகள், அவர்கள் மனோபாவம் எப்படியாயினும் உண்மையான சிந்தனையாளராக அத்வைதத்தின் சிறப்பை உணர்ந்தனர். இது அத்வைதத்தையே போற்றி பலப்படுத்துகிறது.

## ஆராய்ச்சி முறை

மறுபடியும் நாம் தொடங்கின கேள்விகளுக்கு உத்தரம் கொடுப்போம். எங்கிருந்து வந்தோம்? நமது சாச்வதமான நிலை எது? இப்பொழுது நாம் யார்? எது நமது லக்ஷ்யம்? சாதாரண மனிதனே இக்கேள்விகளுக்கு சரியாக பதிலுரைக்காமல் பல மந்த புத்தியினர் ஏமாற்றினர்.

இந்த இடத்தில், "தத்துவஞான ஆராய்ச்சி" என்றால் என்ன என்று கேட்ட யுவனுக்கு ஒரு பல்கலைக் கழகத்து தத்துவசாஸ்திரப் பேராசிரியர் பதிலுரைத்தது ஞாபகத்திற்கு வருகிறது:— "ஏ" என்பவன் "பி" யுடன் பேச, "பி" "ஏ" யுடன் பேச ஒருவரை ஒருவர் புரியாத நிலையே தத்துவ சாஸ்திர வாதம்.! இப்படியே புரியாது பேசி வந்தபடியாலேயே தத்துவ சாஸ்திரப் படிப்பு பலரது ஆராய்ச்சிக்கு உகந்ததாகக் கருதப்படவில்லை.

இனி பின்வரும் பக்கங்களில், இந்த ஆராய்ச்சி எவ்வளவு சுலபம் என்பதை எடுத்துக்காட்டி தெருவில் நடக்கும் சாதாரண மனிதனும் பின்பற்ற முடியும் என்பதை விளக்கிக் காண்பிப்போம். அந்த மனிதனும், ஈசுவரன் யார்? ஜீவாத்மா எது? ஜகத்தின் நிலை என்ன? என்பவைகளைப் புரிந்துகொள்ள முடியும்.

## ஆத்மா

ஆத்மா இருக்கிறதா? ஆத்மாவென்றால் என்ன? நாஸ்திகன் ஆத்மா இல்லை என்கிறான். மத்தியில் புத்தியை மட்டும் பிரமாணமாகவுள்ள சம்சயாத்மா இறுதியில் ஆஸ்திகனாகிறான். நாம் இம்மூலாதாரமான கொள்கையில் நிச்சயமில்லாவிடில் மேல் விசாரணையில் ஈடுபடமுடியாது.

ஆத்மாவெனும்பொழுது என்ன நமக்குப் புரிகிறது? முதல்முதலாக " நான் " எனும்பொழுது நம் மனதில் ஆத்மாவை எண்ணுகிறோம். அதனால் நம் தேகத்தை ஆத்மா என்கிறோமா? இல்லவே இல்லை? ஏனெனில் " நான் ஒல்லியாக இருக்கிறேன் ", " நான் பருமனை ஆகிருதியையுடையவன் " என்றெல்லாம் சொல்லும்பொழுது உன் உடம்பு ஒல்லி, பருமன் என்கிறாய். " என்னுடைய உடம்பு என்கிறபொழுது அது ஆறுவது வேற்றுமை (षष्ठी विभक्ति) உடையவன் உடையது என இரு தோற்றங்கள் எனது கடிகாரம் என்று சொல்லும்பொழுது கடிகாரம் உனது சொத்து, நீ அதற்கு அதிபன் (சொந்தக்காரன்). எனவே, " நீயும் உனது கடிகாரமும் ஒன்றாகவில்லை. " எனது " என்ற பிரயோகத்தாலேயே,, சரீரம் உனது சொத்து, நீ அதற்கு சொந்தக்காரன் என விளங்குகிறதல்லவா?

இன்னும் உள்நோக்கி பிரயாணம் செய்வோம்: ஆத்மாவுடன் சேர்த்து அர்த்தமற்று பல சாமரன்களைப்

புத்தி மயக்கத்தினுல் உபயோகப்படுத்துகிறேம். இப்படி ஒவ்வொன்ருகத் தள்ளப்பட்டபின், எது மிஞ்சு கிறதோ அதை ஆத்மாவென்கிறேம். அதேமாதிரி "என் கண்கள்", "என் காதுகள்", "என் மூக்கு" எனும்பொழுது நான் என்பது ஐம்புலன் களல்ல என மிஞ்சும்

இன்னும் மனதினுள்ளே சென்ருேமானல் கனவில் மனம் வேலை செய்வதைப் பின் அறிகிறேம். மனதுதான் ஆத்மாவா? இல்லை. ஏனெனில் சிலசமயம் நீ 'என் மனது அலைகிறது. அதை ஓரிடத்தில் என் புத்தியால் கட்டுப்படுத்துகிறேன்' என்கிருய். எனவே மனமும் ஆத்மாவில்லை.

பின் ஆத்மா புத்தியா? ஒரு பத்திரத்தை ரிஜிஸ்தர் செய்ய சப்ரிஜிஸ்தார் ஆபீஸுக்குப் போகிருய். பத்திரத்திற்குரிய பதிவு தொகைகட்டி, மற்றெல்லா விபரங்களையும் பூர்த்திசெய்து பத்திரத்தை ஆஜர்படுத்து கிருய். அவர் அதைப் பதிவு செய்கிருர். உன்னுடைய அதிகாரம், பத்திரம் சரியா என்பதெல்லாம் அவர் வேலை யில்லை. பத்திரத்தின் அதிகாரத்தால் சொத்தை அனுபவிக்கச் செல்லும்பொழுது உண்மையான சொந்தக்காரன் மறுக்கிருன். 'நீ ஏமாந்தாய் உன்னை மோசம் செய்துவிட்டான்' சிவில் கோர்ட்டுக்குப்போ' என்கிருன். நியாயாதிபதியின் தீர்ப்பே முடிவு. அதிக புத்தியை உபயோகிக்காமல் பத்திரத்தைப் பதிவு செய்கிற ஸப்ரிஜிஸ்தார், மனது மாதிரி - நியாயாதிபதி புத்தி மாதிரி எனவே நம் கண்கள், காதுகள், மூக்கு, நாக்கு, சருமம் மூலம் முதலில் மனதால் பதிவு செய்கிறேம் சப்ரிஜிஸ்தார் மாதிரி. நாம் கனவு காணும்பொழுதும் எழுந்து, "கனவே" எனும பொழுதும், நாம் தியானம்செய்யும்பொழுதும் மனது வேலை செய்கிறது. விழிப்பிலோ அல்லது கனவிலோ அல்லது தியானத்திலோ, எது சரி எது தப்பு, எது நல்லது எது தீமை என்பதை புத்தியால் நிச்சயிக்கிறேம்.

புத்திதான் ஆத்மாவா? இல்லை; சிலசமயம் சொல்லுகிருய்: "புத்தியை சரியாய் இனி உபயோகப் படுத்துகிறேன்" என்று. எனவே புத்தியை உனது ஒரு கருவியாகவோ, சொத்தாகவோ பேசுகிருய். ஆகவே புத்தியும் ஆத்மாவின் வேலைக்காரனே.

இம்மாதிரி உள்ளே சென்று, சென்று, எல்லா இந்திரியங்களுக்கும் உடையவனை நினைக்கிறோம். இந்த இறுதியாக மிஞ்சும் "நானே" ஆத்மா.

நம்முள் இருக்கும் அது புலன்களுக்கு அப்பால் உளது. மனதுக்கும புத்திக்குமப்பாலுள்ளது. அந்தோ! சாப்பிடக்கூடாததை சாப்பிட்டு வியாதி வசப்பட்டும், நாக்கு தன் யஜமானனுன ஆத்மாவை அனுசரிக்கமறுக்கிறது! வால் நாயை ஆட்டுவதுபோல; எனவே உண்மையான யஜமானன் நம்முள்ளிருக்கும் ஆத்மாவே.

## ஆத்மாவின் லக்ஷணம்

ஆத்மா சரீரம் ஐம்புலன்கள் மனது புத்தி, இவைகளுக்குள் இருக்கும் யஜமானன் என்று உணர்ந்து அதனுடைய ஸ்வஸ்வருபத்தை (स्वरूप लक्ष्यम्) நிர்ணயம் செய்வோம். இதை நாம் கண்டுபிடித்தால் 'எங்கிருந்து வந்தோம் எங்கு செல்வோம்' என்ற கேள்விகளுக்கு உகந்த பதில் கிட்டும். பலவிதமாக இதை ஆராய முடியுமாயினும், இங்கு எந்த மனனமார்க்கம எமக்குத் தக்க பயனளித்ததோ, அதைப் பின்பற்றுவோம். இம் மார்க்கம் இதர ஸாதகர்களுக்கும் பயனளிக்கக்கூடும்.

முதலில் இதன் லக்ஷணத்தை அறிவோம். ஸம்ஸ்கிருததில் லக்ஷணம், உபலக்ஷணம், உபாதி (लक्षण उपलक्षण उपाधिः) என மூன்று பிரிவுகளுண்டு.

லக்ஷணமென்பது ஒரு வஸ்துவின் அந்தர்கதமான, பிரிக்கப்படாத குணம.

தாத்காலிகமாகப் பொருந்தும் குணம் உபலக்ஷணம்.

உதாஹரணம்:— உன் வாசஸ்தலத்திலிருந்து அதே தெருவிலுள்ள ஒரு நண்பனிடம் புத்தகத்தைக் கொடுக்க உன் வேலைக்காரனை அனுப்புகிறாய். வேலைக் காரனுக்கு வீடு தெரியாததால், நீ "அதோ அந்த வீட்டின்மேல்' காகம் உட்கார்ந்திருக்கிறது வீட்டுக்கு முன் ஒரு ஸாரட்டு நிற்கிறது. அதனருகில் மூன்று பெண் மணிகள் பேசிக்கொண்டிருக்கின்றனர். அந்த வீடு தான்" என்றாய். "புரிந்துகொண்டேன்" என வேலைக்காரன் சொல்லுகிறான். பாதிதூரம் போனதும் காகம் பறந்துபோய் விட்டது; ஸாரட்டு வண்டியும் நகர்ந்தது; மூன்று பெண்மணிகளும் புறப்பட்டு விட்டார்கள். இவை நிமித்தம் வீடு மறைந்துவிடுமா? அச்சமயம் வேலைக்காரனுக்கு புரிந்துகொள்ள சில அடையாளங்கள் கொடுக்கப்பட்டன. ஆனால் இவைகள் அவ்வீட்டின் லக்ஷணங்களல்ல. இவை தாத்காலிக மான உபலக்ஷணங்களே.

மூன்றாவது முறைக்கு உபாதி எனப்பெயர் இதி னுதவியால் ஒரு பொருளை சாசுவதமாக அறியலாம். உ-ம்: ஒரு குழந்தைக்கு எப்படி சந்திரனைக் காண்பிக் கிறோம். "அதோ பார்! அந்த மரத்தின் கிளைகளின் நடுவில் ஒரு வட்டமான வெள்ளை உருவைப்பார், அதுதான் சந்திரமாமா" குழந்தை புரிந்து பார்க்கிறது. இம்மாதிரி வர்ணிக்கும்பொழுது சந்திரன் கிளைகளின் நடுவில் இல்லை, பல்லாயிரம் மைல்களுக்கப்பாலுளது என்பது உனக்குத்தெரியும் அதும் பொய்யாயிருந் தாலும், உண்மை சந்திரனைப் பார்ப்பதற்கு குழந்தைக்கு ஒரு நிரந்தரமான அறிவைக்கொடுக்கிறது. மறுநாள் ஆகாயத்தைப்பார்த்து குழந்தை மற்றொரு இடத்தில் சந்திரனைப் பார்க்கிறது. எனவே மூன்று விதமான விவரணங்கள் கிட்டின.

1. லக்ஷணம்:– ஸ்வரூபத்தில் சேர்ந்தது சாசுவதம்.

2. உபலக்ஷணம் :— தாத்காலிகம், நிரந்தரமாகப் பொய்

3. உபாதி :— தாத்காலிகத்திலும் எப்பொழுதும் பொய்.

இந்த மூன்று முறைகளில் ஒரு பொருளுக்குள்ள வர்ணனையைக் கொடுக்கலாம். இவ்வித முறைகளில் ஆத்மாவின் குணங்களை அறிந்து உபலக்ஷணத்தையும் உபாதியையும் நீக்கி, ஆத்மாவின் ஸ்வரூபத் (லக்ஷணத்) தைப் புரிந்துகொள்வோம்.

ஆத்மாவின் லக்ஷணத்தைக் கண்டுபிடிக்கப் பல முறைகளிருப்பினும், இரண்டு முறைகளைப் பின்பற்றுவோம்.

1. உள்நோக்கும் முறை (Introspective)

2. ஹைதுக முறை (Synthetic)

## உள்நோக்கும் முறை

உபாதியையும், உபலக்ஷணத்தையும் நீக்கி லக்ஷணத்திற்கு வருவது.

உதாரணம் :— வெந்நீரும் குளிர்ந்த நீரும் நாம் அனுபவித்தவையே. எனினும் சாஸ்திரங்கள் குளுமையே நீரின் குணமென்கின்றன. ஏன்? சூடான நீரை நாம் பார்க்கும்போது சூடு அதன் குணமல்ல. நெருப்பின் சூட்டாலோ, சூரிய கிரணங்களாலோ அதாவது ஒரு தாத்காலீக வெளிக் காரணத்தால் நீர் சூடாயிருப்பதை அறிகிறோம். குஜராத்திலுள்ள வீராம்கெய்னில் (Viramgain) ஒரு குளமே சூடான நீருள்ளதாயிருப்பதைப் பார்க்கும்போது, ஏன் நீர் சூடாயிருக்கிறது என்கிறோமல்லவா! இந்த "ஏன்" என்ற கேள்வியே ஜலத்திற்கு உஷ்ணம் ஒரு குணம் அன்றென விளக்குகிறது. அங்கு கந்தக ஊற்றுக்கள்

இருப்பதால் ஜலம் சூடானது. இம்மாதிரி விவரணை யினால் குளுமையே நீரின் சுவபாவம்என விளங்கும். உஷ்ணத்திற்கு எது காரணமாயினும் அந்த உஷ்ண நீரே சிலகாலம் ஓர் பாத்திரத்தில் கொட்டிவைத்தால் குளிர்ந்துவிடும். ஒரு வெளிக்காரணத்தால் உஷ்ண மாயிற்று. அது சமனமாக ஒரு காரணமும் தேவை இல்லை !! உஷ்ணமான நீரிலுள்ள உஷ்ணம் முன் கண்ட காகம், ஸாரட்டு, மூன்று பெண்மணிகள் மாதிரி ஒரு உபலக்ஷணம்

ஒரு செப்புப் பாத்திரத்தை திராவகத்தால் சுத்தம் செய்தாலும், நாளடைவில் பழைய அழுக்கு அடைந்த, பச்சை நிறத்திற்கே வரும். ஏன்? அழுக்கு (பளிச்சென்ற நிறமல்ல) செம்பின் லக்ஷணம்.

எனவே மேற்கூறிய உதாரணங்களின் மூலம் நாம் அறிவது ஒரு வஸ்துவின் இயல்பான குணத்தை, ஏன் என நாம் கேட்பதில்லை. அதற்கு சமாதானமும் தேடுவதில்லை. சில காலம் அதின் குணம் இயற்கை யாகவோ சேர்க்கையாகவோ மாற்றப்பட்டாலும், இறுதியில் தனது இயல்பான குணமே மிஞ்சுகிறது. இம்மாதிரியான பரிசீலனை செய்தால் வேதாந்தத்தில் கூறப்படும் ஆத்மாவின் ஸ்வரூபம் நன்கு விளங்குமே.

## ஹைதுக அல்லது மீமாம்ஸா முறை

## (Teleological)

சாதாரண மனிதனுக்கும் இந்த சுலபமான முறை புரியும். இதன்மூலம் ஆத்மாவின் தன்மை எங்கிருந்தது முன்? போகுமிடமெது? முதலிய பிரச்னைகளுக்கும் விடைகிடைக்கும். இந்த முறையிலேயே பாலனாயிருந்த பிருகு (பின்னர் மஹரிஷி) தன் பிதாவான வருணனைக் கேட்டார். வருண பகவானோ ஒரு சிறிய உதவி மட்டும் பண்ணி பிருகுவைத் தானே கண்டுபிடிக்க உபதேசித்தார். அவர் கொடுத்த உதவி— "எங்கிருந்து

எல்லாம் வந்தனவோ, எதால் எல்லாம் கார்க்கப் படுகிறதோ, எதற்குள் எல்லாம் மறைகின்றதோ அதுவே ஈசுவரன்". வருணனது உபதேசத்தை நிரூபிக்க பிரகிருதியிலிருந்து பல உதாரணங்கள் கொடுக்கமுடியும். உதாரணம்:— "விதை பூமியிலிருந்து முளையாகக் கிளம்புகிறது. பூமியால் ஆதரிக்கப் படுகிறது: முடிவில் மறைகிறது பூமிக்குள்.

மீன்களிலிருந்து ஒரு நிரடல்லாத சாதாரண உதாரணம் கிடைக்கிறது. நீரிலே வசிப்பது மீன் என்பது எல்லோருமறிந்ததே. இதை அறியாத ஒருவன் குளத்தின் கரையிலோ ஆற்றங்கரையிலோ தவிக்கிற ஒரு மீனை குளிர்ந்த காற்றிலிருக்கப் பண்ணி வீட்டுக்குக் கொண்டுபோய் தன் மெத்தையில் படுக்கவைத்தும் தவிப்பதை அறிந்து திரும்பவும் குளத்திலோ நதியிலோ விட்டதும், அது நீந்துவதைக் கண்டு என்ன அறிந்தான்? நீரே மீனின் இடம். இதுகாறும் தவித்தது தான் வந்தவிடமும் வாழ்ந்தவிடமுமான நீரில் சேராததால். இதிலிருந்து நாமறிவது நமது இயல்பான, உண்மையான நிலையையே தேடுகிறோம் அந்நிலையில்லையேல் சுகமில்லை. இதுவே ஹைதுகமுறை அத்வைத சித்தாந்தம் முழுவதையும் இம்முறையைக் கையாண்டு ஸ்தாபிக்க முடியும் இனி ஆத்மாவின் இயல்பான உண்மையான நிலையை ஆராய்வோம்.

## அமர வாழ்வு

ஆத்மாவின் முதல் குணம் சாஸ்திரப் பிரகாரம் सत् அல்லது त्रिकालाबाध्यमस्तित्वम्. முக்காலங்களிலும் அது உளது. நாம் பல கோணங்களில் இதை மனனம் செய்வோம்.

1. மனோதத்துவ சாஸ்திர ரீதியில்:

நாம் "மரணம்" என்கிறோம். ஒரு நண்பர் "இறந்தார்" என்கிறோம். "மரணம்" என்றால்

என்ன? இதுகாறும் "நான்" என்பது ஆத்மாவே என்றறிந்ததை நினைவுறுத்துவோம். இந்த "நான்" என்பதற்கும் "சாவு" என்பதற்கும் ஏதாவது சம்பந்தமுண்டா? ஒருநாளுமில்லை, வைத்தியரோ, உறவினரோ நாடியைப் பார்த்து இந்த மனிதன் இறந்தான் என்கின்றனர். இது பிறர் சொல்வது. அந்த மனிதன் சாவதற்கு முன்னால் தான் மரணம் அடைந்துவிடுவேனோ என்று எண்ணி பயப்படுகிறான். ஆனால் ஒருவனாவது நான் இறந்துவிட்டேன் என்று சொல்வதில்லை. இறந்த மனோநிலை ஒருகாலும் வருவதில்லை. அது நடக்கமுடியாதது. "நான்" என்பதும் "சாவு" என்பதும் ஒருநாளும் சேருவது இல்லை. "நான் சாகப்போகிறேன்" என்றபோது அவன் சொல்லுவது நிகழ்காலமன்று, இறந்தகாலம் அன்று, வருங்காலத்தையே குறிக்கிறது.

தவிர, குறுகிய காலமரணமான தூக்கத்தை ஆராய்வோம். மரணத்தை நீண்ட தூக்கமென்று சொல்வதுண்டு. நித்திரையில் இச்சையுள்ள கும்பகர்ணனை ஸ்ரீராமர் வதம்செய்ததை மஹாகவி காளிதாசன் வர்ணிக்கிறார்.

[1] अकाले बोधितो भ्रात्रा प्रियस्वप्नो वृथा भवान् ।
रामेषुभिरितीवासौ दीर्घनिद्रां प्रवेशितः ॥

"ஹே கும்பகர்ணா! உனக்கு தூங்குவதில்தான் ரொம்பபிரியம் உன் அண்ணா ராவணன் அகாலத்தில்—தூங்குவதற்கு சமயம் வராதபொழுதே - உன்னை எழுப்பிவிட்டான். இது உனக்குப் பிரியமில்லை. உனக்கு பிரியத்தை உண்டுபண்ணுவதற்காகத்தான் ராமபாணம் உன்னை நீண்ட தூக்கத்தில் (மரணத்தில்) ஆழ்த்திவிட்டது" இங்கு மரணத்தை தீர்க்க நித்ரை என்று கூறுகிறார்.

---

1. ரகுவம்சம் ஸர்க்கம் 12.

நித்திரையின் ஒரு ஹாஸ்யமான அம்சம் "நான் தூங்கினேன். நான் தூங்கப்போகிறேன்" "ரொம்பத் தூக்கமாகவிருக்கிறது" என்கிறோம். ஒருகாலும் நீ சொல்ல முடியாது "நான் தூங்கிக்கொண்டிருக்கிறேன்" என்று. அப்படி நீ சொன்னால் நீ தூங்கவில்லை என்பது ருஜுவாகிவிட்டது. எனவே "தூக்கம்" என்ற பதம்கூட "நான்" என்ற பதத்துடன் சம்பந்தப்படாது. அது முடியாத நிலை. எனவே "சாவு"டன் "நான்" என்பது சேரமுடியாததால், ஆத்மாவுக்கு மரணம் கிடையாது என்று தெரிகிறது.

சிலசமயம் நீ செத்ததாகவும் உற்றார் உறவினர் உன் உடம்பைச்சுற்றி அழுவதையும் கனவில் காண்கிறாய். இதிலும் ஒரு ஆச்சரியமான நிலை. கனவில் நீ இறந்த பொழுது, எல்லோரும் அழுவதையும் பார்க்கிறாய். இறந்த பிறகும் உயிர் மிஞ்சுகிறதே!

எனவே ஆத்மாவிற்கு அமரத்வம் ஒரு இயல்பான லக்ஷணம்.

2. ஹைதுக மார்க்கத்தில் :

முன் மீனின் உதாரணத்தை விவரித்தோம். அதை ஞாபகப்படுத்துகிறேன். வாழ்வதும் இறப்பதும் நமது இயற்கையானால் மரணத்தைத் தடுக்க ஏன் முயலுகிறோம்? எது நமது இயல்போ அதை மாற்றமுடியாது.

மற்றுமொரு உதாரணம் :— ஆபீஸ் போகும்போது ஒரு உடை தரிப்பது அவசியமானதால் அணிகிறாய். அது உன்னை உறுத்தினால் "எப்போதடா இதைக் கழற்றியெறிய வீடு செல்லுவோம்" என எண்ணுகிறாய். ஏன்? அது உனக்கு இயல்பல்ல. உன் மேல் திணிக்கப்பட்டது. எப்போதப்பா தூக்கியெறியப் போகிறோம் என்கிறாய். எனவே இயல்பற்ற காரியமே உன்னை ஓய்வெடுக்கத் தூண்டினது. ஆனால் உயிருடன் இருப்பதில் ஓய்ச்சல் இல்லையே! உடல்

சோர்ந்து, விழியும் சோர்ந்து, ஐம்புலன்களும் திணறும்போது, உயிர் வாழும் ஆசை விடவில்லை. ஏன்? வாழ்க்கை இயல்பு.

மரணம் இயல்பல்லாதது. மரணமே நமது இயல்பான குணமானல், திரும்பவும் உரைக்கிரும். ஒருநாளும் அதைத் தடுக்க முயலமாட்டோம். ஜீவிக்க ஆசையிருப்பதாலேயே, வாழ்வே நமது இயல்பு.

வாழ்க்கையையும் மரணத்தையும் விடுவோம்! சுகமான வாழ்க்கையையும், வியாதியையும் கவனிப்போம்! சுகஜீவனத்தை விரும்புவதும், வியாதியை வெறுப்பதுமேன்? சுகவாழ்வே இயல்பு. வியாதியஸ்த வாழ்வு இயல்பல்லாததல்லவா? ஏன் வியாதியை ஸ்வஸ்தப்படுத்துகிரும்? ஒரு மனிதன் நோயினல் பீடிக்கப்பட்டால், ஏன்? என்ன உடம்பு? என்கின்றனர். இந்தக் கேள்வியும் அதற்கு ஸமாதானமுமே நோய், துன்பம், கஷ்டம் இவை இயல்பு அல்லாதது எனத் தெரிகிறது. ஒருவன் நோயற்ற வாழ்விலிருக்கையில் ஒருவராவது ஏன்? எனக் கேட்பதில்லை! எனவே சுகவாழ்க்கையே இயல்பு. அதற்கு சமாதானம் சொல்லவும வேண்டியதில்லை. எனவே ஜீவித்திருப்பது இயல்பு. மரணம் இயல்பு அல்லாதது. ஆகவே ஆத்மா அமரன்.

3. விஜ்ஞான சாஸ்திர சாக்ஷியம் :

பேராசிரியர் ராஸ்கோவின் ரஸாயன சாஸ்திர ஆரம்ப நூலில் "ஒரு மெழுகுவத்தி எரியும்பொழுது ஒரு நஷ்டமுமில்லை" எனப படித்தோம். இதைப் படித்ததும் பணமும் செலவாயிற்று, மெழுகுவர்த்தியும் அழிந்தது. இந்த ஆசிரியர் சொல்வதை எப்படி நம்புவது என ஒரு கேள்வி உதிக்கலாம். ஆனல் அவர் விவரிக்கிருர் ஒரு மெழுகுவத்தி எரியும்பொழுது ஹைட்ரோஜனும் (Hydrogen) கரியும் எரிநது, பிராணவாயுவுடன் கலந்து கரியமிலவாயுவாகிறது.

எனவே வஸ்துவிற்கு நாசமில்லை. இடம், உருவம், பெயர் இவைதான் மாறுகின்றன! அம்மாதிரியே ஒரு தச்சன் ஒரு நாற்காலியோ, ஒரு பெஞ்சோ பண்ணும்போது ஒன்றையும் புதிதாக சிருஷ்டிக்க வில்லை. ஆனால் பிரகிருதியில் ஈசுவரனுலாய காட்டிலுள்ள மரத்தை வேலைசெய்து அதற்குரிய உருவில் அமைக்கிறன். இங்கு வஸ்து புதிதாக உண்டாகவில்லை. ஆனல் இடம், உருவம், பெயர் இந்த மூன்றுமே (வெளித்தோற்றம்) மாறுதல்கள். இதையே நவீன பிரகிருதி சாஸ்திரததில் (Physics) நீண்ட பெரிய ஆடம்பரமான பெயரால் விளக்கு கிறுர்கள். "பிரகிருதியின் நாசமற்ற தன்மை", "பிரகிருதி சிருஷ்டிக்கப்படாதது" என்று.

இந்தப் பிரகிருதி சாஸ்திர தத்வத்தை, பகவத் கீதையில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் ஒரு அரை சுலோகத் தில் உபதேசிக்கிறுர்:

[1] नासतो विद्यते भावो नाभावो विद्यते सतः ।

[இல்லாதது வரவேயில்லை. இருப்பதோ அழிவது இல்லை]

பிரகிருதி சாஸ்திரத்தையும், ரஸாயன சாஸ்திரத் தையும் உபயோகிப்போம். "இப்பிறப்பிற்கு முன் நான் இருந்தேனு? இல்லையா? இறந்தபின் நான் மிஞ்சுவேனு? அல்லது அழிவேனு?" முன் ஒருகேள்வி:

"நீ இப்பொழுது இருக்கிறுயா? இல்லையா?"

இக்கேள்விக்கு உன் பதிலையொட்டியே முன் கேள்விகளுக்குப் பதில் கிடைக்கும்.

"இப்போது நானில்லை" என்று ஒருவரும் சொல்லமாட்டார்கள்.

---

1. கீதை 2-16.

"இப்போது நீ வாழ்வதால் இதற்கு முன்னும் நீ இருந்திருக்கவேண்டும். ஏனெனில், எது இருக்க வில்லையோ அது புதிதாய் வராது! இப்போது நீ இருப்பதால், பிற்காலத்திலும் நீ இருந்தேயாக வேண்டும்; ஏனெனில் இருப்பது இல்லாதது ஆகாது" ஆனால் மெழுகுவர்த்தி, மரம் எப்படி மாறினவோ அப்படியே இடம், உருவம், பெயர் (ஆகிய மூன்றும்) மாறுதலடையும். ஆனால் ஒருகாலமும் நீ இல்லாமல் இருக்கமுடியாது. இது விஷயத்தைத் த்ருடப்படுத்தி விட்டது. தீவ்ரமான சாதகர்கள் இப்போதே (மனம் தெளிந்து) ஆத்மா அமரனே என்பர். தத்துவஜ்ஞான ஆராய்ச்சியையோ, பிரகிருதி சாஸ்திரத்தையோ படிப்பானேன்?

4. பாஷைமூலம் ஸாக்ஷியம்:

ஸம்ஸ்க்ருத பாஷையிலுள்ள சொற்களின் கருத்துக்களை நன்கு அறிந்தாலே இது ஊர்ஜிதமாகும். எமது அபிப்பிராயத்தில், அது ஒன்றுதான் சம்பூர்ண மான மொழி. அதை தேவபாஷையாகவும் கருது கிறோம். அதில் ஒரு வார்த்தையாவது அர்த்தமற்றது அல்ல. நமது மனத்திற்கும் இதயத்திற்கும் சீரிய தத்துவநெறிகளையும், விஜ்ஞான தத்துவங்களையும் போதிக்கிறது. இதன் உண்மையை அறிய ஒரு புருஷாயுஸ் பூராவும் முனைந்து படித்தாலும் போதாதே! இதினாலேயே யாம் அடிக்கடி சொல்லுவதுண்டு. ஸம்ஸ்கிருதம் தேவபாஷையாயில்லாவிடினும் (எமக்கு அவ்விதமென்றே பூர்ண நம்பிக்கை), இது இருந்தே ஆகவேண்டும். ஸம்ஸ்கிருதம்தவிர வேறு பாஷைதேவர் களதானால் அவர்கள் வெட்கித் தலைகுனிய வேண்டியது தான். தத்துவஞான சாஸ்திர ரீதியாகவோ விஞான மூலமோ தவிர, ஸம்ஸ்கிருத பாஷையின் உதவியைக் கொண்டும் இதை சுலபமாக அறிந்துகொள்ள முடியும்.

உ-ம்:- ஸம்ஸ்கிருத பாஷையிலுள்ள ஜந்ம (பிறப்பு) என்ற சொல்லை எடுத்துக்கொள்வோம். அது ஜநி

प्रादुर्भावे என்ற தாதுவிலிருந்து வந்தது. அதாவது "முன்னால் வெளிவருகிறது" என்பது தாதுவின் பொருள். எது நமக்கு மறைந்திருந்ததோ அது முன்னால் நமக்கு தென்படுகிறது.

பிறப்புக்கு மற்றொரு வார்த்தை उत्पत्तिः. उद् என்றால் "மேல்" पद् என்றால் "போ" மேல்வந்து வெளி வருகிறது. அதாவது, கீழே மறைந்திருந்தது இப்போது உயரே வந்து காணப்படுகிறது.

மூன்றாவது ஸம்ஸ்கிருதவார்த்தை सृष्टिः. सृज विसर्गे "உள்ளே மூடியிருந்தது வெளிவருகிறது" அதாவது, உள்ளே மூடப்பட்டிருந்தது வெளியில் தள்ளப்பட்டிருக் கிறது.

இந்த ஸம்ஸ்கிருத பதங்களிலிருந்து, மனோ தத்துவம் யாதெனில்.

நமது புலன்களின் அமைப்பு, இயல்பாக உள்ளிருந்து புறப்பட்டு வெளியே வருகின்றன. உள்நோக்கிச் செல்லவில்லை.

[1] पराञ्चि खानि व्यतृणत्स्वयंभूः
तस्मात् पराङ् पश्यति नान्तरात्मन् ।

என்று கடோபநிஷத்தில் கூறியுள்ளபடி நாம் நம் புலன்களால் நமக்கு வெளியிலுள்ளவைகளையே பார்க்க முடியும். நமது கண்களையே நாம் பார்க்கமுடியாது. கண்ணாடியினுள் பார்க்கும்போதும் நம் கண்களைப் பார்க்கவில்லை. அவைகளின் பிரதிபிம்பத்தையே பார்க்கிறோம். எனவே நமது கண்களையே பார்க்க முடியாத நிலையில் அவைகள் பின்னோ, உள்ளோ, நம்முள்ளோ பார்க்க இயலாது. இவை தளத்திற்கு மேல் வரும்போதும், நமக்கு வெளியில் தென்படும் பொழுதுமே பார்க்கமுடியும்.

---

1. கடோபநிஷத் 4-1.

ஸம்ஸ்க்ருதத்திலுள்ள மூன்று பதங்களும் – ஜன்ம, உத்பத்தி, ஸ்ருஷ்டி – என்ன நடந்திருக்கின்றன என்பதைத் தெரிவிக்கின்றன. அதாவது, இல்லாதது ஒன்றும் புதிதாக வரவில்லை. ஏற்கனவே இருப்பது வெளிப்படாதது வெளிவந்திருக்கிறது. ஸம்ஸ்க்ருதத்தில் இவை தவிர நான்காவது பதமில்லை !

இனி, "சாவு" என்பதைக் கவனிப்போம். ஸம்ஸ்க்ருத வார்த்தை नाशः என்பது नश अदर्शने – "மறைவது அல்லது பார்க்கப்படாதது". எனவே அது மூன்று இடங்களிலும் பொருந்துகிறது.

(1) ஒருவன் இறந்தபோது,

(2) இதர தேசத்திற்குப் போனபோது,

(3) அல்லது காணப்படாதபோது.

இந்த நான்கு பதங்களிலிருந்தும் நாமறிவது: பிறப்பும், சாவும் ஆத்மாவுக்கு ஆரம்பமும் முடிவுமல்ல. ஆனால் ஆரம்பமும் முடிவுமற்ற பாதையில் சில மைல் கற்கள். அதாவது ஸம்ஸ்கிருத நிகண்டுவிலிருந்து ஆத்மா அமரர் என அறிகிறோம்.

## ஞானம்

ஆத்மாவின் அடுத்த குணம் चित् அல்லது ज्ञान अதாவது வரையற்ற பூர்ண ஞானம். தினசரி வாழ்க்கையில் நமது அறியாமையையும் நாம் செய்யும் கோரமான தப்புகளையும், அவைகளிலிருந்து விளைபவைகளையும் நினைக்கையில் பூர்ண ஞானமொன்றுண்டா எனத்திகைக்கிறோம். சிறிது சிந்தனை ( मनन ) செய்தால் இதுவும் உண்மையே எனத்தெரியும். முதலாவது, ஆத்மாவை பூர்ண ஞானத்திலிருந்து பிரிக்க முடியுமா ? ஓரளவிற்கு சில பாகங்களில் நமக்கு அறிவுண்டு. இவ்விடத்தில் அந்த அறிவு பூர்ணமாவென்பதை கவனிக்கவேண்டாம். இதைப்பின் ஆராய்வோம். நமக்கு அறிவு ஓரளவிற்கு இருக்கிறது என உணருகிறோம்.

இங்கு ஒரு ஹாஸ்யமான கதை ஞாபகத்திற்கு வருகிறது. ஒரு ஸ்திரீ தன் கணவனிடம் 'ஒரு விஷயத்திலாவது இவ்வுலகில் நமது அபிப்பிராயம் ஒரேமாதிரியாயில்லை' என்ருள். கணவன் 'ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் நமக்கு ஒற்றுமை இருக்கிறது. அதாவது நம் இருவருக்கும் ஒரே அபிப்ராயமுள்ள விஷயமே இல்லை' என்று பதில் சொன்ஞன். எனவே ஒருவன் தனக்கு ஒரு விஷயத்தில் ஒன்றும் தெரியவில்லை என்ருல், தனக்கு ஒன்றும் தெரியாது என்பது அவனுக்குத் தெரியும். அதுவும் அறிவே. எனவே ஞானமே ஆத்மாவின் இரண்டாவது லக்ஷணம். அதிலிருந்து பிரிக்க முடியாதது.

இது விழிப்பு, கனவு, தூக்கம் என்ற மூன்று அவஸ்தைகளிலும் உள்ளது. தூக்கத்திலும் உள் நினைவு இருக்கிறது. உள்ளடங்கியிருக்கிறது. அது எப்படி? ஒரு சிறு அனுபவத்தை எடுத்துக்கொள்வோம். நல்ல தூக்கத்தில் ஒரு கொசு பாதத்தினடியில் கடிக்கிறது. நீ நன்ருக உறங்கினுலும் நினைவு சம்பந்தமான நரம்புகள் தூங்குவதில்லை. தேகதத்வ சாஸ்திரத்தில் (Physiology) இரண்டுவிதமான நரம்புகளைப் படிக்கிருேம். ஒன்று வெளியிலிருந்து சமாசாரங்களை மூளைக்குக் கொண்டுபோகிறது. மற்ருென்று மூளையிலிருந்து தேகத்தின் பாகங்களுக்கு உத்தரவிடுகிறது. இந்த நரம்புகள் சதாகாலமும் வேலைசெய்துகொண்டேயிருக்கின்றன. நீ அதனை உணராமல் போனுலும், கொசுவினுல் உன் தூக்கம் கலையாவிடினும் காலுக்கு வந்த உபத்ரவம் மூளைக்குச் சென்று அது உடன் கைக்கு உத்தரவிட்டு. அந்த வலியைத் தொடைத்தாகிவிட்டது. விழித்தபின் அவ்விடத்தில் ஒரு துளி ரத்தத்தைப் பார்த்துக் கொசுக்கடித்து, அவ்விடத்தில் நகத்தால் சொரிந்திருக்கவேண்டும் என ஊகிக்கிருய்! தேகதத்வ சாஸ்திர விஞ்ஞானி இதை உடனுக்குடன் யோசிக்காமல் நடந்த காரியம் எனலாம் பெயர் எதாயினும் தூங்கும்போதும் மூளைக்குத்

தகவலெட்டி, வேண்டிய பரிகாரம் நடக்கிறது. எனவே, தூங்கும்போதும் ஞானம் தன் அலுவலைச் செய்தே வருகிறது. அதாவது, (ज्ञान) ஞானம் இரண்டாவது ஆத்மாவின் லக்ஷணமென அறிகிறோம். அது ஆத்மாவுடன் பிரிக்கப்படாமல் சேர்ந்தே இருக்கிறது.

இன்னும் நுட்பமாக ஆராய்ந்து இந்த ஞானமானது (खण्ड) கண்டமா, (अखण्ड) அகண்டமா, அல்லது (परिच्छिन्न) பரிச்சின்னமா, (अपरिच்छिन्न) அபரிச்சின்னமா என ஆராய்வோம். நாம் "இந்தத் தப்பு செய்தோம், அந்தத் தப்பு செய்தோம்" என்கிறோம். ஆனால் வேதாந்த சாஸ்திரங்களில் ஆத்மாவை (चित्स्वरूप) சித்ஸ்வரூபம் என்கின்றன. தீர பரிசீலனை செய்தால், நம்முள் உள்ள அறிவு அகண்டமானது, பூரணமானது என்று தெரியும்!

உதாரணம்:— உன் அறையில் ஜன்னல் கதவுகளையெல்லாம் மூடி ஒரு ஓட்டை வழியாக சூரியனின் கிரணம் வரச்செய்தால், அதைக்கண்டு உலகெலாம் இவ்வளவுதான் சூரியவெளிச்சம் எனக் கூறலாமா? த்வாரத்தின் அளவுக்குத் தக்கபடி சூரிய கிரணம் உள் புகுந்தது. அதிலிருந்து சூரியனின் பூரணமான வெளிச்சத்தை நிச்சயிக்க முடியாது. அதேமாதிரி ஒரு வீட்டினுள் பிரமாதமான வெளிச்சமிருக்கையில் வெளியிலிருந்து பார்க்கும் ஜனங்களுக்கு அவ்வெளிச்சம் தெரியாது. ஆதி ஜகத்குரு ஸ்ரீ சங்கரபகவத்பாதாள் கூறுகிறார்:

[1] नानाच्छिद्रघटोदरस्थितमहादीपप्रभाभास्वरम् ।

(பல த்வாரங்களுள்ள பாத்திரத்தினுள் இருக்கும் ஒரு பெரிய விளக்கின் ஜ்யோதி மாதிரி சோபையுளது ஆத்மா).

---

1. தக்ஷிணாமூர்த்யஷ்டகம்.

மின்சார சக்தி நிலயத்திலிருந்து பெரிய சக்தி வெளிவந்தாலும் நாம் உபயோகிக்கும் பல்பின் சக்தியைப் பொறுத்தே நமக்குக் கிட்டுகிற வெளிச்சம். மின்சார சக்திக்கு நிறம் கிடையாது. அது பல்பினுடைய நிறத்தைப் பொருத்ததே. அதேமாதிரி, நாம் கற்கும் அறிவெல்லாம் உள்ளே உளதே; அது (अज्ञान) அறியாமை என்ற படுதாவால் மறைக்கப்பட்டிருக்கிறது. பகவத் கீதையில் ஸ்ரீ கிருஷ்ண பகவானும்,

[1]"अज्ञानेनावृतं ज्ञानं तेन मुह्यन्ति जन्तवः ।"

என்று உபதேசிக்கிருர் :— (ஞானம் அஞானத்தால் மூடப்பட்டு, எல்லா பிராணிகளும் மௌட்யத்தில் மூழ்கியிருக்கின்றனர்).

அக்னி, மின்சாரம், கட்டிடம் கட்டல், கல்வி முதலியவைகளுடைய அனுபவத்திலிருந்து இந்த தத்துவத்தை ஆராய்வோம. எப்படி அக்னியை மூட்டு கிறேம்? நாம் அக்னியை உண்டாக்கவில்லே; அது ஏற்கனவே ஒரு மூடிய, மறைந்த நிலேயிலுள்ளது. நாம் செய்வதெல்லாம் (अरणिमथन) இரண்டு மரத் துண்டுகளே மோதப்பண்ணியோ, கல்லேக் கல்லால் அடித்தோ, அல்லது தீக்குச்சியாலோ, அல்லது வேறெவ்விதமோ, மறைந்த அக்னியை வெளிவரப் பண்ணுவதே.

அம்மாதிரியே மின்சார சக்தியிலும் நாம் சிருஷ்டிக்கவில்லே. அது ஏற்கனவே அங்கிருக்கிறது. ஈசுவர சிருஷ்டியில் உலகெலாம் பரந்து உள்ளிருந்த மின்சார சக்தியை வெளிவரத்தான் பண்ணினேம்.

ஒரு சில்பி பளிங்குக் கல்லிலிருந்து ஒரு சிலே செதுக்கும்போது என்ன செய்கிருன்? வெளியி லிருந்து ஸ்ரீ கிருஷ்ணனதோ, ஸ்ரீ ராமனதோ, ஸ்ரீ சிவனதோ, ஏசுநாதரதோ சிலேகளே எடுக்கவில்லே.

1. கீதை 5-15.

பளிங்குக் கல்லில் உலகிலுள்ள எல்லா உருவங்களும் உள. அவனுக்கு எல்லாம் வேண்டாம். ஒரு உருவம் தான் தேவை. அவன் செய்வது தன் மனத்தை அந்த (மூர்த்தி) மூர்த்தியில் ஏகாக்ரசித்தமாக நிறுத்தி அந்த மூர்த்தியை மறைக்கும் பாகங்களை செதுக்கித் தள்ளுகிறான். எனவே, சில்பிக்கு வேண்டிய உருவம் வெளியிலிருந்து வரவில்லை. உள்ளிருந்து வெளி வந்தது இதொன்றுதான் நாம் செய்யமுடியும். வெளியிலிருந்து ஒன்றையும் எடுக்காமல் உள் இருந்ததைப் பிரகாசப்படுத்தவேண்டும்.

கல்வியறிவிலும், கல்வி என்றாலே (ஆங்கிலத்தில்) "வெளியேயிழுபபது" என்று பொருள். எந்த முறையில் நம்முள்ளிருக்கும் மறைந்த இயல்பான அறிவு சக்திகளை வெளியில் பூரணமாகப் பிரகாசிக்கச் செய்கிறோமோ, அம்முறையே கல்வி. உருப்போடுவது போலுள்ள வித்தைகளெல்லாம் உண்மையான கல்வி அல்ல. இம்முறையை உட்செலுத்துகை (Injection) என்றே சொல்லவேண்டும். இது வைத்தியர் நுட்ப மான ஊசியால் செய்யும் உடசெலுத்துகை மாதிரி அன்று, இரண்டு மொண்ணையான பருமனான கருவி களால, பிரமபடிக்குப் பயம், பரீக்ஷையில் தோற்கும பீதி, மனத்திற்கும் பணத்திற்கும் கேடான முறை.

இப்படி பலவந்தமாக கல்வி புகட்டுவதை வாதத் திற்காக ஒத்துக்கொண்டாலும், அது சரியான முறையா? நீருக்கு சூடு லக்ஷணமன்று; உபலக்ஷணம; வெளியிலிருநது வநதது. சிறிது நேரத்தில் ஜலத்தை விட்டுப் போய்விடும என்பதை நினைவுறுத்துகிறோம. ஞானம் உள்ளிருந்து எழும் லக்ஷணமில்லாமல் வெளியி லிருந்து புகுத்தப்பட்டதென எண்ணினல் அது நமக்கு நன்மையைக்கொடாது. உள் மறைந்திருந்த எந்த அறிவு வெளிப்பட்டதோ அந்தக் கல்வியே உபயோகப் படும். நம் படிப்பு இயல்பாக உள்ளிருந்து வராமல் வெளியிலிருந்து புகுத்தப்பட்டால் அந்த படிப்பெல்லாம்

சுடுநீரிலிருந்து சூடு வெளிப்படுவது போலாகும். எனவே எல்லா ஞானமும் நம்முள் உளதே. எந்த ஆசாரியன் இந்த மறைந்த ஞானத்தை வெளிவரப் பண்ணி உலகின் நன்மைக்காக பிரகாசிக்கப்பண்ணு கிருனே அவனே சீரிய குரு. மற்றோரெலாம் ஏமாற்று கிறவரே. (Teacher then becomes a Cheater). இதையே ஸ்ரீ கிருஷ்ணன் கீதையில்

[1] तेषां आदित्यवज्ज्ञानं प्रकाशयति तत्परम् ॥

(ஆதித்யனை மறைக்கும் மேகங்களை காற்று வீசி நீக்கும்பொழுது, காற்றுலுதித்த சூரியனன்று, முன்னமே யிருந்த சூரியனே காற்று வீசி மேகங்களுடைய மறைவு நீங்கவே பிரகாசிப்பதுபோல், அக்ஞானம விலகியதும் ஞான ஸ்வரூபமான ஆத்மா பிரகாசிக்கிறது). அதாவது, கலவிப்பயிற்சி, பண்பு இவைகளால் புதிய அறிவு கிட்டவில்லை. உள்ளே புதைந்திருந்த ஞானத்தை வெளிப்படுத்தி அதாலாகும் வெகு பலன் களை நாம் உபயோகிக்க காரணங்களாயின. பயிற்சியால் இயல்பை மாற்ற முடியாது. எனவே ஆத்மாவின் லக்ஷணம் அகண்ட ஞானம்.

## பிரெஞ்சு குமாரியின் கதை

ஓராண்டுக்கு முன் (before 1933) பத்திரிகை களில் வந்த பிரெஞ்சு மாதின் அனுபவங்களை ஆராய்வோம். பிரெஞ்சு பாஷை மட்டும கற்ற ஒரு பிரெஞ்சு மாது கடும் சுரத்தால் சில வாரங்களாக நினைவற்றிருந்தாள். தெய்வாதீனமாகப் பிழைத்தபின் பிரெஞ்சு பாஷையையே மறந்து தான் கற்காத 12 பாஷைகளில் பாண்டித்யததைக் காண்பித்தாள்! தத்வக்ஞானிகள், மனோதத்வ சாஸ்திர நிபுணர்கள், விக்ஞானிகளெல்லாரும் இதைச் செவ்வனே ஆராய்ந்து அவளுடைய நிலை உண்மையே என்று கூறி அந்த அபூர்வநிலைக்குப் பின்வரும் சமாதானம் சொன்னுர்கள்:

1. கீதை 5-16.

எல்லா விஷயங்களுடைய பூர்ண ஞானம் நம் மூளைக்குள் அடக்கம். நம் முயற்சியாகிய சில திறவுகோல்களால் நம் வாசனை, சூழ்நிலை, பயிற்சி இவைமூலம் சில பூட்டுக்களே திறக்கப்படுகின்றன. மற்ற பூட்டுக்களைத் திறக்கத் திறனற்று இருக்கிறோம். ஆனால் இந்தப் பிரெஞ்சு மாதின் விஷயத்திலோ என்ன காரணமோ தெரியவில்லை – ஏதோ ஒருகாரணத்தால் அடைத்த கதவுகள் திறக்கப்பட்டு 12 பாஷைகளின் ஞானம் கிட்டிற்று!!! இதோ, வேதாந்திகளின் கொள்கையான, ஆத்மா அகண்ட பூர்ண ஞானத்துடனுளது என்பது பிரத்யக்ஷபிரமாணத்தால் ருஜுவாகிவிட்டது.

ஹைதுகரீதியில் ஜீவன ஆசையே நமது அமரத்வ லக்ஷணத்தை நிச்சயிக்கிறது. அதுபோலவே எல்லாவற்றையும் அறியும் அவாவே ஆத்மாவிற்கு பூர்ண ஞானமே லக்ஷணமென்பதை நிருபிக்கிறது.

## குறைவற்ற ஆனந்தம்

அமரத்வம், அகண்டஞானம் என்ற ஆத்மாவின் இரண்டு லக்ஷணங்களை விசாரித்தோம் ( सत् ) ஸத் ( चित् ) சித் இந்த இரண்டிற்கப்புறம் உபநிஷதங்கள் ஆனந்தத்தை ( आनन्द ) மூன்றுவது லக்ஷணமாகப் பறை அடிக்கின்றன, சதாகாலமும் வருத்தத்தையும், துக்கத்தையும் அனுபவிக்கும் நாம் இதை நம்ப தயங்குகிறோம். ( मनन ) விசாரணை செய்தோமாயின் உபநிஷத் பிரதிபாத்யம் சரிதான் என விளங்கும். இது எவ்வளவோ எளிதாயினும் மாயையின் ஆச்சரியகரமான மறைவு நமது புத்தியை மங்கப்பண்ணுகிறதைப் பார்ப்போம்.

ஒருவன் அழும்பொழுது, மற்றவர் அவனை ஏன் அப்பா அழுகிறாய் என வினவுகின்றனர். ஏன் மற்றோரை ஏன் அழாமலிருக்கிறீர்கள் என்பதை

ஒருவரும் கேட்பதில்லை ? இதிலிருந்து துக்கம் நமது இயல்பானதன்று என விளங்கும். தாத்காலிகமான ஒரு வெளிக்காரணத்தால் விளைந்தது. அதாவது அது லக்ஷணமில்லை (லக்ஷண்), உபலக்ஷணமே (உபலக்ஷண்). தன் அருமை மனைவி இறந்ததே தன் துக்கத்திற்குக் காரணமென்றாலும் சூரியன் தனக்கு அஸ்தமனமானான் என்று எண்ணினவனும், நாள் கழியக்கழிய அவனது துக்கம் குறைந்து இறுதியில் மனைவி மரணத்தையும் மறந்துபோகிறான். எனவே உஷ்ண ஜலத்தின் வெப்பம் தானாகத் தணிவதுபோல வெளிக்காரணங்களாலேற்பட்டவை நாளடைவில் சமனமாகிறது. ஆகவே துக்கமும் உஷ்ணஜலத்தின் வெப்பம், வீட்டின் மேல் உட்கார்ந்த காகம், வீட்டின் முன்னால் நின்ற ஸாரட்டு, தெருவில் கூடிய பெண்கள் இவைமாதிரி ஒரு உபலக்ஷணம் தான். என்வே துக்கம் நமக்கு இயல்பு அல்ல, ஆனந்தமே நமது இயல்பு. சிலநாள் வெளி துக்கத்தினால் பாதிக்கப்பட்டாலும், ஆனந்தம் உள்ளிருந்து வெளிப்பட்டு, வெளியிலிருந்து புகுந்த துக்கத்தை விரட்டும்.

ஹைதுக முறையிலும் எப்படி நமது ஜீவிக்கிற ஆசையும், ஞான அவாவும், அமரத்வத்தையும், அகண்ட ஞானத்தையுமே நம் இயல்பென ஊர்ஜிதப் படுத்தினவோ அம்மாதிரி, நமது ஆனந்தத்திலீடுபடும் ஆசை, நமது ஆனந்திக்கும் அவா, நமது இயல்பு ஆனந்தமென நிர்ணயிக்கிறது. எவ்வளவுக்கெவ்வளவு இந்நிலையிலிருந்து விலகித் தூரப் போகிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு நமது கஷ்டம் அதிகரிக்கும். எப்படிக் கரையில் தவித்த மீன்கள் தன் இயல்பான நீருக்குள் குதிக்கின்றனவோ, அதேமாதிரியே ஆனந்தம் நம் இயல்பு. நாம் செய்யும் கருமமெல்லாம் ஆனந்தம் அடையவே! எப்போதும் அதற்கேற்ற உபாயங்களைக் கடைப்பிடிக்கிறோமா என்பது வேறு விஷயம். இன்னும் ஒரு அடி எடுத்துவைப்போமானால், நாம் தேடும் ஆனந்தம் காலம், இடம், அளவு இவைகளுக்கு

அப்பாலுள்ளது. துக்கமற்றது. அகண்டமானது, அளவற்றது என்பது தெரியும்.

## சுவராஜ்யம்

நமக்கு அமரத்வம், அகண்ட ஞானம், அளவற்ற ஆனந்தம் இவை கிட்டியபோதும் திருப்திப்படுகிறோமா? இல்லை. ஏனெனில் சிரஞ்ஜீவியாயினும், எல்லாமறிந்த பின்னும், அகண்டானந்தத்தை அனுபவித்தும், நாம் ஸ்வேச்சையாயில்லாமல் மற்றவருக்குக் கட்டுப்பட்டு, பராதீனராயின் நமக்குத் திருப்தியில்லை. சிலகாலமே கட்டுப்படுத்தும் சங்கிலிகளை உடைக்காமலிருப்போம். அதுவும் பலமில்லாததாலேயே. இவ்வகண்ட உலகில் ஒருவர் தயவின்றியும் வாழவே நாம் இச்சைப்படுகிறோம். பகுத்தறிவுள்ள மனிதன் மட்டுமல்ல, ஒவ்வொரு ஜந்துவும், இந்த முமுக்ஷுத்வத்திற்கு – மோக்ஷமடைந்து ஸ்வதந்திரமாயிருக்க मुमुक्षा தவித்துக் கொண்டிருக்கிறது. மானிடப்பிறவிக்கு அல்லும் பகலும், அறிந்தோ அறியாமலோ சதாகாலமும் இந்த ஆசையிலீடுபடுவது இயல்பே. இந்த இடைவிடாத சுவராஜ்யப்பசியே கட்டுகளற்ற சுவதந்திர நிலையே நமது இயல்பென ருஜுப்படுத்துகிறது எனவே மோக்ஷம் நமது நான்காவதான (लक्षण्) லக்ஷணம்.

## பிரபுத்துவம்

இந்த நாலாவது அவாவும் நமது லக்ஷியங்களுக்கு முடிவல்ல. நமது துடிப்பு ஆசை செயல் இவைகளை சரியாகவும் நேர்மையாகவும் பரிசீலனை செய்தால், ஸத், சித், ஆனந்தம், மோக்ஷம் (सत्, चित्, आनन्दः, मोक्षः,) இவையும் போதாது எனலாம். இந்த ஐந்தாவது அவா நான்காவதிற்கு முரணனதாயினும் ஆசைக்கோர் அளவில்லை! இதை மறுக்கவே முடியாது. அந்த பேரவா எது? ஒரு பக்கம் சுவராஜ்யத்திற்கு ஆசை, மற்றய அபிலாஷை பிறர் தமது அதிகாரத்துக்குக் கட்டுப்படவேண்டும், உலக அனுபவமற்ற சிறுகுழந்தை

கள்கூட தன் தாய் தந்தையர் தாங்கள் நிர்ணயிப்பதைப் பின்பற்ற வேண்டுமென்கின்றன. இதற்கு விலக்கே கிடையாது. ஒவ்வொருவனுக்கும் தன் இதயத்தில் அமரத்வம், அறிவு, ஆனந்தம், சுவதந்திரம் தவிர மற்றோர்மேல் ஆளவேண்டும் என்ற ஆசையுமுளது. உண்மையாக பூர்ண பிரபுத்வமும் இவ்வுலகில் வேண்டுமென்ற பேரவாவுளது. எனவே இந்த பிரபுத்துவமும் ஆத்மாவின் ஐந்தாவது லக்ஷணமே.

## மொத்தம் – எல்லாம் கூட்டியது

இறுதியாக, நம்மைச் சுற்றியுள்ள வஸ்துக்களை ஆராய்ந்தும் நம்மவுள்ள துடிப்புகளையும் நோக்கில், सत चित् आनन्दः मोक्षः ईशनं – அமரத்வம், அகண்ட ஞானம், பேரானந்தம் மோக்ஷம், பிரபுத்துவம் ஆகிய ஐந்து லக்ஷணங்களும் நமக்கு இயல்பானவை என அறிகிறோம் உஷ்ண ஜலத்திற்கு எப்படி சீதளம் இயல்போ அம்மாதிரி சிலகாலம் அமுக்கப்பட்டு அடக்கப்படினும் சாசுவதமாக அடக்கப்பட முடியாது. இந்த லக்ஷணங்களை அறிவதில் அனுபவரீதியிலும் இறுதியில் மர்மமென்ன? எங்கு தொடங்கினோம்? எங்குவந்து சேர்ந்தோம்?

சாதாரண மனிதனுடைய விஷயங்களையும் ஆசைகளையுமே அலசி, அலசி, விசாரித்தோம் ஈசுவரனதையோ, அமானுஷ்யப் பிறவியையோ நாம் பரிசீலனை செய்யவில்லை இதுகாறும் நாம் ஈசுவரன் ஒருவர் இருக்கிறார் என்பதை பூர்வபக்ஷமாகக்கூடச் சொல்லவில்லை. முழுவதும் ஜீவாத்மாவைப் பற்றியே ஆராய்ந்தோம் நம்முன்னுள்ள அனுபவங்களிலிருந்து, ஈசுவரன் ஒருவனுண்டு என்ற நம்பிக்கையிலோ அவரைப்பற்றிக் கேட்டுத் தியானம் செய்வதிலோ ஈடுபடாமல் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறோம். இந்த सत्स्वरूप – அமரத்வம், चित्स्वरूप – ஞானஸ்வரூபம், आनन्दस्वरूप – ஆனந்தஸ்வரூபம், मुक्तस्वरूप – மோக்ஷ

ஸ்வரூபம், ईश्वरस्वरूप – பிரபுத்வஸ்வரூபம் ஐந்து லக்ஷணங்களேயே ஈசுவரனதாக எல்லா மதங்களும் பறையடிக்கின்றன. இவைகளே நமது இயல்பான உண்மையான உள்ளுள்ள லக்ஷணங்களென (விசாரணையாலும் தியானத்தாலும்) அறிந்தோம். அறிந்தோ அறியாமலோ உள்ளோ வெளியிலோ இடைவிடாமல் முழுபலத்துடன் இந்த அபார பலமுள்ள ஈசுவரனது லக்ஷணங்களை அடைய முயலுகிறோமென்பது சித்தியாயிற்று.

## ஈசுவரனும் ஜீவாத்மாவும்

ஜீவாத்மாவின் லக்ஷணங்களும், பரமாத்மாவின் (ஈசுவரனின்) லக்ஷணங்களும் ஒன்றென நிர்ணயித்தோம். இதை சரியாக உணர்ந்தால் ஜீவாத்மா வந்த இடமெது முதலியன உடனே தெரிந்துவிடும். நமது லக்ஷ்யம் துலங்கினுல் சரியான மார்க்கமும் தெரியும். எனவே (नर) நரனை நாம் (नारायण स्वरूप) நாராயண ஸ்வரூபமேயென உணரவேண்டும். வெகு கீழே நாம் விழுந்துவிட்டதால் சோகத்திலும் கஷ்டத்திலும் உழலுகிறோம். கீழே விழ விழ நமது துயரமும் கஷ்டமும் மிகைப்படும் எனவே இந்த சுழலிலிருந்து தப்ப ஒரே வழி நமது (स्वस्वरूपभूतलक्षण) ஸொந்த ஸ்வரூப லக்ஷணங்களை திரும்ப அடையவேண்டும். ஏனெனில் நாராயணனிடமிருந்து வெளிவந்தோம். அவராலேயே ரக்ஷிக்கப்படுகிறோம். அவரிடமே லயமடைவோம்.

## ஒருமையும் பன்மையும்

இதுவரை நாமறிந்தது நரனுக்கும் நாராயணனுக்கும் ஒற்றுமைகளிருக்கின்றன என்பதே. பைபிளில் கண்ட ‘தனது உருவிலேயே ஆண்டவன் மனிதனை சிருஷ்டித்தான்’. என்ற வாக்கியம் ருஜுவாகிவிட்டது; ஆனுல் ஈசுவரனும் நாமும் ஒன்றே என்பதை எப்படி ருஜுப்பண்ணுகிறது? முன் விசாரிக்கப்பட்ட ஐந்து லக்ஷணங்களால் மனே தத்துவ ரீதியில் ஒற்றுமை இருக்கின்றது

எனலாம். ரஸாயன சாஸ்திர ரீதியாக ஒற்றுமையை எப்படி ஊகிக்கிறது ? நமது சாஸ்திரங்கள் பறையடிக்கின்றன—மேலாக வெளியில் தோன்றும் கணக்கற்ற பன்மையினுள் ஒரு சத்தியமான ஒருமை உளது. ரசாயன சாஸ்திர ரீதியில் மட்டுமன்று கணித சாஸ்திர ரீதியாகவும் (परमात्मा) பரமாத்மா, (जीवात्मा) ஜீவாத்மா, (जगत्) ஜகத் இம்மூன்றிற்கும் ஒருமை உண்டு இதையும் நமது மனனம் தியானமூலம் ஆராய்வோம். பலகோணங்களிலிருந்து இந்த பிரச்னையை விசாரிப்போம்.

## ஸ்ருஷ்டியின் கதை

சிருஷ்டி என்றால் என்ன? நமது உபநிஷதங்களுக்கும் கிருஸ்தவ பைபிளுக்கும் ஒரு சிறு வித்தியாசமுண்டு முரண்பாடில்லை.

ஆரம்பத்தில் பைபிள் GENESIS முதல் செய்யுள்.

"ஆரம்பத்தில் கடவுள் பரமண்டலத்தையும் பூமியையும் சிருஷ்டித்தார்" சிருஷ்டி கிரமத்தை விவரிக்கையில் கடவுள் எல்லாமுணர்ந்தவர், சர்வ வல்லபர், சத்திய பிரதிக்ஞையுடையவர் என்கிறது. கடவுள் கூறினார்-'பிரகாசம் வருக' என்று, பிரகாசமும் தோன்றிற்று ஆனால் இவ்விடத்தில் கடவுள் (சிருஷ்டி கர்த்தா) பிரகாசம், சிருஷ்டி இந்த மூன்றுக்குமுள்ள சம்பந்தம் விவரிக்கப்படவில்லை. உபநிஷதங்களோ இன்னும் உட்சென்று போதிக்கின்றன. "சத்திய சங்கல்பத்துடன்" தொடங்கி சம்பந்தத்தை விவரிக்கிறது.

சங்கல்பம்:—[1] बहु स्यां प्रजायेय- (நான் பல ஆவேன் பல ரூபங்களில் வெளிப்படுவேன்.) ஒருவித சந்தேகத்திற்குமிடமில்லை. ஈசுவரன் (सर्वज्ञः) எல்லாமறிந்தவன் (सर्वशक्तः) சர்வவல்லபன், (सत्यसंकल्पः) சத்தியசங்கல்ப

1. தைத்திரீயம் 2-6

முடையவன் என்பதை ஒத்துக்கொண்டால் பின் நம்முன் பார்க்கும் எல்லாம் அந்த பரமாத்மாவது வெளித்தோற்றங்களே. பல சரீரங்கள், ஐம்புலன்கள், பலமனங்கள் என பலவிதமானவை என்பது உடனொடியாக ஒத்துக்கொள்ளப்படவேண்டும். ஆனால் தோற்றங்களெல்லாம் ஈசுவரனுக்கு அன்னியமானவை என்றால் நீ உதடளவில் ஆஸ்திகனே தவிர ஈசுவரனை சர்வ வல்லபர், பிசகு செய்ய முடியாத திட புத்தியுடையவர் என்பதை மறுப்பதாகும்.

[1]सदेव सोम्य इदमग्र आसीत् (ஈசுவரன் ஒருவரே இருந்தார்) एव-அவரே என்ற நிச்சயபதமிருப்பினும் [2]नान्यत् किञ्चन मिषत् என்ற மற்றொரு வாக்கியம் வேறொன்றுமில்லை என்கிறது சிருஷ்டி ஆரம்பமாயிற்று, அவர் பல ஆனார். சாஸ்திரங்கள் இதை பிரதிபாதிக்கின்றன. சிருஷ்டி செய்ததெல்லாம் அவரே. இதுமூலம் பரமாத்மா, ஜீவாத்மா, ஜகத் மூன்றும் ஒன்றென நிர்ணயம் செய்யமுடிகிறது.

ஈசுவரனது சிருஷ்டி சங்கல்பம் தவிர, மற்றொரு தெளிவான வாக்கியமுளது. [3]सच त्यचाभवत् (''அவரே பார்க்கப்படுவதும் பார்க்கமுடியாததுமான ஜகத்தானார்) இவைகளுக்குப் பிறகு வேதாந்தத்தால் நிர்ணயிக்கப்பட்டது அத்வைத ஸித்தாந்தமென்பது தெள்ளெனத் தெளிவாகிறது.

மறுபடியும் (सृष्टि) ''சிருஷ்டி'' என்ற ஸம்ஸ்கிருத பதத்திலிருந்தே ஜகத்தும் ஈசுவரனும் ஒன்றென்பதை நிர்ணயிக்கலாம். सृष्टि சிருஷ்டி என்றாலே विसर्ग உள்ளிருந்ததை வெளியில் தள்ளுவதெனப் பொருள்.

வேதாந்த உபமானம் :—

[4] यथोर्णनाभिः सृजते गृह्णते च

---

1. சாந்தோக்யம் 6–2 2. ஐதரேயோபநிஷத்
3. தைத்திரீயம் 2–6 4. முண்டகம் 1—7

பட்டுப்பூச்சி நூலை வெளியில் தள்ளி உள்ளே இழுப்பதுபோல, ஈசுவரன் ஜகததை சிருஷ்டியில் வெளியில் தள்ளி பிரளய காலத்தில் உள்ளே இழுக்கிருர். எனவே, இந்த உபமானத்தால் புதிதாக ஒன்றுமில்லை. சிருஷ்டியே அப்ரகாசமாக இருந்தது வெளியே வந்தது என அறியவேண்டும்.

## பைபிளின் வரலாறு

இப்பொழுது, பைபிளின் வாக்கியத்தை 'ஆரம்பத்தில் கடவுள் பரமண்டலத்தையும் பூமியையும் படைத்தார்' என்பதை ஆராய்வோம். இதைப் பரிசீலனே செய்தால் உபநிஷத் கருத்தை உறுதிசெய்கிறது. கடவுள் 'பரமண்டலததையும் பூமியையும் சிருஷ்டித்தார்' என்ற வாக்கியத்திலிருந்து, அதற்குமுன் அது ஒன்றே வேறென்றுமில்லை என ஊகிக்கலாம். அவர் சிருஷ்டி செய்தபொழுது எந்த ஜடவஸ்துவிலிருந்து சிருஷ்டித்தார்? (உதா:) ஒரு மண்குடம செய்யப்படும்பொழுது குயவனும் மண்ணும் இருந்திருக்கவேண்டுமே? அந்த மாதிரி ஒரு பொன் ஆபரணம் செய்யும் பொழுது தட்டானும், தங்கமுமிருந்திருக்கவேண்டும் வாஸ்தவமாக குயவனும், தட்டானும வருமுன் களிமண்ணும் தங்கமுமிருந்திருக்கவேண்டுமே. இந்த மாதிரி ஜகத் சிருஷ்டியாவதற்குமுன் படைக்க ஒரு ஈசனும் படைக்கப்படவேண்டிய வஸ்துவுமிருந்திருக்க வேண்டும். ஒரு மண்குடமோ, தங்க ஆபரணமோ பண்ணின சமயத்தில் களிமண்ணும் தங்கமுமிருந்தன. குயவனும், தட்டானும் அப்புறம் வருகின்றனர், வேலை செய்வது எளிதே.

வேதங்கள் மூலமும் பைபிள் மூலமும் கடவுள் ஒருவர் தானிருநதார், வேறென்றுமில்லை என்பது தெளிவாகிறது. அவர் எதிலிருந்து சிருஷ்டி செய்திருக்கவேண்டும். தங்கம்மட்டுமிருந்தது என்று வைத்துக்கொள்வோம், வேறெரு உலோகமோ அல்லது

மற்ற எதுவோ இல்லை என்றால் தட்டான் கொண்டு வந்த ஆபரணம் சுத்தத் தங்கமே. ஆபரணமோ, மற்றெதுவோ அதினுருவமும், பெயரும் எப்படி இருப்பினும் பண்ணியவை தங்கமயமே. எனவே கடவுள் ஒன்றே இருந்தபொழுது, வேறொன்றுமில்லாதபொழுது சிருஷ்டி செய்தபொழுது அப்பொழுதிருந்தது அவரே. ஆகவே எல்லோருள்ளும் எந்த வஸ்துவிலுமுள்ள (மறைந்த) உட்பொருள் கடவுளே, நாம் வெளிப் பார்க்கிற அளவிலோ உருவத்திலோ மற்றெவ்வகையிலோ தான் பலவை. உள்ளிருக்கும் பரம்பொருள் ஒன்றே. உபநிஷத் வாக்கியமும் பிரஹ்மஸூத்திரமும் இதையே உறுதிப்படுத்துகிறது.

[1] वाचारंभणं विकारो नामधेयं मृत्तिकेत्येव सत्यम् ।

(குடம் சட்டி முதலிய பெயர்களே வெளிவந்தவையின் வித்யாசங்கள். ஆனால் அடிப்படையான வஸ்து களிமண்ணே. அதேமாதிரி மனிதர்கள், குதிரைகள், கற்கள், ஜலம் முதலியன வெளிவந்தவையின் பெயர்களே. ஆனால் மூலாதாரமான வஸ்து உள்ளேயுள்ள கடவுளே.) மற்றும் வேதவ்யாஸரது ப்ரஹ்மஸூத்ரம் இதை சுருக்கமாக நிச்சயப்படுத்துகிறது.

[2] तदनन्यत्वमारम्भणशब्दादिभ्यः ॥

('வாசாரம்பண சப்தம்' முதலியவைகளால் பிரபஞ்சம் கடவுளைக்காட்டிலும் வேறு அல்ல.)

பைபிளின் வரலாறும் இங்ஙனமே. பகவான் ஸ்ரீ சங்கராசார்யார் ஒரு ச்லோகத்தில்,

सुवर्णाज्जायमानस्य सुवर्णत्वं हि निश्चितम् ।
ब्रह्मणो जायमानस्य ब्रह्मत्वं च विनिश्चितम् ॥

---

1. சாந்தோக்யம் 6-1

2. ப்ரஹ்மஸூத்ரம் 2-1-14

[தங்கத்திலிருந்து உண்டாகிற நகை தங்கமே. இதுபோல் ஈச்வரனிலிருந்து வந்த உலகம் ஈச்வரனே. இதுவே பகுத்தறிவுக்குகந்தது.] நமது ஜீவாத்மாவும் பரமாத்மாவின் லக்ஷணங்களான सत् - அமரத்வம், चित् - அகண்டஜ்ஞானம், आनन्द - அகண்டானந்தம், मोक्ष - மோக்ஷம், ईश्वरता - ப்ரபுத்வம் இவைகளை பின்பற்றி இழுக்கப்படுகின்றன. தெய்வஸ்வரூபமான நாம் பூரணநிலை எட்டும்வரை அதிருப்தராயிருக்கிறோம். அறியாமை எனும் அந்தகாரத்தில் உழலும் நாம் இந்தப் பஞ்சலக்ஷணங்களைப் பின்பற்றி அலைகிறோம். தெய்வீகத் தன்மையையோ, தெய்வம்மாதிரி இருப்ப வற்றையோ நாம் தேடவில்லை. அவருடன் ஐக்ய மாவதையே தேடுகிறோம்.

இதர மதங்களும் 'கடவுளின் உலகம் உன்னுள் ளேயே', 'நீங்கள் கடவுளே' என்று கூறுகின்றன. ஆனால் வேதாந்தமொன்றிலேயே தெளிவாகவும், சந்தேகமின்றியும் லக்ஷ்யத்தையும் மார்க்கத்தையும் விவரிக்கிறது. உபநிஷத் வாக்யம்,

[1] प्रणवो धनुः शरो ह्यात्मा ब्रह्म तल्लक्ष्यमुच्यते ।
अप्रमत्तेन वेद्धव्यं शरवत् तन्मयो भवेत् ॥

[ஆத்மா அம்பு, ஈசுவரன்தான் லக்ஷ்யம் எப்படி அம்பு லக்ஷ்யத்துடன் சேருகிறதோ அப்படி ஆத்மா தன்மயமாக ஈசுவரனுடன் ஒன்ருக ஆகுக)

## அத்வைதமும் நாஸ்திகமும்

எல்லா ஆஸ்திக மதங்களும் ஈசுவரனுல் ஜகத் சிருஷ்டிக்கப்பட்டது என்பதை ஒத்துக் கொள்ளுவதால் ஆஸ்திக்யம் இறுதியில் அத்வைதத்திற்ருன் முடியும் டெனிஸன் பிரபு சொல்லுவதுபோல் வேதாந்தத்தின்

---

1. முண்டகம் 2-2-4

சீரியநிலை) ஒரு புராதன மதமும் (ஜெயினமதம்) நவீன சகோதரர் ஆர்ய சமாஜமும் ஈசுவரன் ஜகத்சிருஷ்டி செய்யவில்லை என்கின்றனர். இதையும் ஆராய்வோம். ஆனால் யுக்தியிலும் தார்மிக சிரத்தையிலும் ஜெயினர் ஆர்யஸமாஜத்தினரைவிட மேல்பட்டவர்.

ஜீனமதத்தினர் எல்லாமறிந்த ப்ரேம ஸ்வரூபமான தெய்வம் துக்கமும் பாபமும் நிறைந்த ஜகத்தை சிருஷ்டித்திருக்கமுடியாது என்கின்றனர். எல்லா தத்துவ சாஸ்திரிகளுக்கும் ஒரு முட்டுக்கட்டை போலிருக்கிற துக்கம் என்பதைத் தாண்ட புத்தி தீக்ஷண்யமில்லை. கடவுளின் ஜகத்சிருஷ்டியை ஒப்புக்கொள்ளாத காரணம் மெச்சத்தக்கதாயினும் அவர்களது வாதத்தை ஒத்துக்கொள்ளமுடியாது. தார்மிக ரீதியில் ஜெயினர்களுக்கு வேதங்களில் நம்பிக்கை இல்லை. ஆர்யசமாஜத்தாரோ நம்புவதாகப் பறையடிக்கின்றனர். எனவே வாதத்தில் தவறெனலாமே தவிர ஆர்யஸமாஜத்தினர் மாதிரி நாணயமற்றவரல்ல இரண்டு குற்றங்களை ஆரிய சமாஜத்தினரிடம் பார்க்கிறோம். உபநிஷதங்களன்றி இதர மந்திர ஸம்ஹிதையிலும் ஆரியசமாஜத்தாருக்கு நம்பிக்கையுண்டு. உதாரணம் :—

अजायमानो बहुधा विजायते ।

'பிறப்பில்லாதது வெகு உருவங்களாக பிறக்கிறது.' வேதாந்திகள் மாதிரியே சுவாமி தயானந்த ஸரஸ்வதி பாஷ்யம் செய்திருக்கிறார்.

சாஸ்திர விருத்தமன்றி, ஆர்யசமாஜாது நிலையை மீண்டும் ஆராய்வோம். ஈசுவரன் சர்வக்ஞன் சர்வ வியாபி சர்வ வல்லபன் என்பதை ஒப்புக்கொண்டு ஆனால் ஜகத் அவரது சிருஷ்டியல்ல; ஜகத்தும் அவருடனிருந்தது. அவர் செய்தது ஜகத்திற்கு தற்கால உருவமும், பெயருமே அதற்கு இதோ பதில். ஜகத்தும் ஈசுவரனும் வெவ்வேறு பிரத்தியேகமான குணங்

களுடையதானுல் ஈசுவரனது சக்தி ஜகத்தில் செல்ல வில்லை அவரை எவ்வாறு சர்வசக்திமானுகக் கருதுவது? ஏன்? அது குயவனது சிருஷ்டிக்கும் குறைந்ததாகும்.

ஈசுவரன் அரண்யத்தை உண்டுபண்ணினுர், நாம் நகரங்களை உண்டுபண்ணுகிறேம். இப்பொழுது ஒரு பள்ளிக்கூட இன்ஸ்பெக்டருக்கு படிக்கும் சிறுமி பதில் சொன்னது நினைவுக்கு வருகிறது. "குழந்தை, உன்னை யார் சிருஷ்டித்தது?" என்ற கேள்விக்கு "கடவுள் கொஞ்சம் உண்டுபண்ணினுர் பிறகு நான்வளர்ந்தேன்" என்று சிறமி பதில் கூறினுள். இன்னும் தொடர்ந்தால் உலகிலுள்ள மட்டமான மடத்தனத்தை எல்லாம் ஆண்டவன் சிருஷ்டித்தான், நாமோ பட்டிணங்கள், நகரங்கள், ரயில், மின்சார பல்புகள், இதர விஞ்ஞான ஆச்சரியங்களெல்லாம் சிருஷ்டித்தோம். எனவே இருவருள் நாமே உயர்ந்த சிருஷ்டி கர்த்தா!

ஜகத்தும் ஈசுவரனும் வெவ்வேறு என்று கூறும் ஆரிய சமாஜத்தினர் ஆஸ்திகருமல்ல நாஸ்திகருமல்ல. ஏனெனில் நாஸ்திகனுக்கு கடவுளில்லை, ஜகத்து சத்தியம்; ஆஸ்திகனுக்கு ஜகத் ஈசுவரனின் வெளித் தோற்றமே வேறு ஒரு தத்வஞானியும் ஈசுவரன் இருப்பதை ஒத்துக்கொண்டு அவரது சிருஷ்டியையில்லை என்று சொல்வதில்லை. ஏனெனில் இரண்டும் சேர்ந்தே அமைந்தன. இதிலிருந்து எழும் முடிவு ஈசுவரன் உலகை எல்லாம் சிருஷ்டித்தார் தன்னுள்ளிருந்து ஏனெனில் சிருஷ்டிக்குமுன் இருந்தது அவர் (அது) ஒன்றே சிருஷ்டி பண்ணப்படும் வஸ்து வேறென்று மில்லை தத்வம் இரண்டு என்று சொல்பவர்களும் அநேகம் என்று சொல்பவர்களும் (த்வைதிகளும்) சொல் கிறர்கள்: ஆமாம் ஆனல் கடவுள் சர்வஞானி சர்வ வல்லபர் எனவே சூன்யத்தினின்றும் அவர் சிருஷ்டி செய்ய வல்லவர். ஆனுல் பிரச்னை: அவரது சர்வ வல்லமையை பற்றியல்ல. எந்த வஸ்துவிலிருந்து சிருஷ்டி செய்தார்? குயவனது சாமர்த்தியம் நுட்பம்

அறிவு எல்லாம் ஒருபுரமிருக்க அவன் எந்தவஸ்துவிலிருந்து குடம் செய்தானோ அது அவனல்ல. அதே மாதிரி நமது பிரச்னை கடவுளது சாமர்த்தியத்தைப்பற்றியல்ல, அந்த ஆதியில் சிருஷ்டிக்கப்பட்ட வஸ்துவைப்பற்றியே நமது வாதம் யாதெனில் சிருஷ்டி சமயத்தில் ஈசுவரனுக்கிருந்த வஸ்து அவரேயாதலால் அவர் அந்த ஒன்றிலிருந்தே சிருஷ்டி செய்திருக்க வேண்டும். அதாவது தன்னிடமிருந்தே!

[1] ब्रह्मार्पणं ब्रह्म हविर्ब्रह्माग्नौ ब्रह्मणा हुतम् ।
ब्रह्मैव तेन गन्तव्यं ब्रह्मकर्मसमाधिना ॥

(யக்ஞஹவிஸ்ஸூம் அர்ப்பணம் செய்பவனும் அவரே, ஆஹூதியைப்பெறும் அக்னியும் அவரே. அர்ப்பணம் செய்வோனது மனமும் அவரே. கிடைக்கும் பலனும் அவரே) என்ற கீதாவசனம் எல்லாம் அவரே. அவரைக்காட்டிலும் வேறல்ல என்பதை உறுதியாகக்கூறுகிறது. எனவே இப்பொழுது இதில் யாதொரு சந்தேகமுமில்லை.

இன்னும் கடவுள் ஜகத்தை சிருஷ்டிக்கவில்லை என பிடிவாதம் பண்ணுவோருக்கு, அதாவது அவர் சூனியத்திலிருந்து சிருஷ்டித்தாரென்போருக்கு அப்பொழுதும் நம் வேதாந்தவாதம் பங்கப்படவில்லை. எப்படி மண்ணிலிருந்து பண்ணின குடம் மண்ணோ சூன்யத்திலிருந்து பண்ணின ஜகத்தின் நிலையும் சூனியமே. இது मायावाद மாயாவாதத்தின் திரிபே. இந்த வாதமூலம் ''ஈசுவரன் ஒருவரே இருக்கிறார் மற்றொன்றுமில்லை ஈசுவரனைத் தான் சூன்யம் என்ற பெயரால் குறிப்பிடுகிறார்கள்''. த்வைதியிடமிருந்து இப்படி அத்வைதத்திற்கு ஆதரவு கிட்டியது போதாதா?

தவிர, சிருஷ்டி சமயத்தில் ஈசுவரன் ஒருவர்தான் இருந்தார் வேறொன்றுமில்லை என்றால், இது கீதா

---

1 கீதா 4-24

வாக்கியமான "नासतो विद्यते भाव:" (பிரகிருதி சாஸ்திர வாதியுடைய "பிரகிருதிக்கு அழிவில்லை" வாதம்) இல்லாததிலிருந்து ஒன்றும் வராது இருப்பது இல்லாததாகாது எனவே ஈசுவரன் ஒருவரே இருந்தால் அவர் ஒருவரே இருக்கிறார். அவர் ஒருவரே (சாசுவதமாக) இருக்க முடியும். அதாவது, "ஈசுவரனும் ஜகத்துமொன்று" அல்லது "ஈசுவரன் ஒருவரே உளர். வேறென்றுமில்லை" Q. E. D.

## பஞ்ச பூதங்கள்

இன்னும் தெளிவுற, சிருஷ்டி சமயத்துள்ள பஞ்ச பூதங்களான – ஆகாசம், வாயு, அக்னி, ஜலம், பூமி இவைகளை ஈசுவரன் சிருஷ்டித்ததால் அவைகளை தன்னுள்ளிருந்தே சிருஷ்டித்திருக்க வேண்டும். உபநிஷத்வாக்கிய பிரகாரம் मृत्तिकेत्येव सत्यम् (உண்மையில் உள்ளிருக்கும் வஸ்து களிமண்ணே) பூமி ஜலத்திலிருந்து வந்தது அதனுடன் ஐக்கியம்; ஜலமும் அக்னியிலிருந்து வந்தது அத்துடன் ஐக்கியம் அக்னி வாயுவிலிருந்து வந்தது அததுடன் ஐக்கியம், வாயுவும் ஆகாசத்திலிருந்து வந்தது அத்துடன ஐக்கியம் ஆகாசம் ஈசுவரனிடமிருந்து வந்தது, அவருடன் (அத்துடன்) ஐக்கியம் எனவே எல்லா பிரகிருதிகளும் ஈசுவரனிடமிருந்து வந்தவை. அத்துடன் ஐக்கியம்.

இனி பிரகிருதிகளின் குணங்களை விசாரிப்போம். शब्द, स्पर्श, रूप, रस, गन्ध (சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரசம், மணம்) ஆகாசத்திற்கு ஒரு குணம் - சப்தம் வாயுவிற்கு இரண்டு - சப்தமும் ஸ்பர்சமும், அக்னிக்கு மூன்று - சப்தம், ஸ்பர்சம், ரூபம், ஜலத்திற்கு நான்கு - சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம்; பூமிக்கு ஐந்து - சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் (மணம) இப்பொழுது இந்த குணங்களை கீழிருந்து மேலே நாசமாகிற முறையில் - பூமியின் ஐந்தாவது குணமான மணம் முன் இருந்த ஜலத்திற்கு கிடையாது - அது புதிய குணமே.

ஆனல் கீதாசாரியன் உபதேசிக்கிருர் नासते विद्यते भावः பிரகிருதி சாஸ்திரமும் ''இல்லாததிலிருந்து ஒன்றும் வர முடியாது'' எனவே கந்தத்தை மித்யை, என்று ஜலத்துள்ளிருப்பதாகத் தள்ளினல், பூமிக்கு முக்கிய குணமான கந்தம் போகவே பூமி மறைந்து ஜலமே மிச்சம் இதேமாதிரி 4-வது குணமான ரஸம் போகவே ஜலத்தை மித்யை என்கிருேம். அக்னி மிச்சம். மூன்ருவது குணமான ரூபம் போகவே அக்னி மித்யை வாயு மிச்சம். பிறகு இரண்டாவது குணமான ஸ்பர்சத்தை ஆகாசத்தினுள்ளிருப்பதால் மித்யை எனத் தள்ளி, இறுதியாக முதல் குணமான சப்தத்தை ஈசுவரனுள் உளதால் மித்யை எனத் தள்ளி - பஞ்ச பூதங்களையும் மித்யை என்று ஈசுவரனுள் அடக்கம் என உபஸம்ஹாரம் செய்யலாம்.

இதை கணித முறையில் பூமி=ஜலம், ஜலம்=அக்னி அக்னி=வாயு, வாயு = ஆகாசம், ஆகாசம = ஈசுவரன் ∴ तद्भिन्नाभिन्नस्य तद्भिन्नत्वनियम (Euclid யூகிலிட்டு முதல வஸ்துவைக் காட்டிலும் 2-வது வேறல்ல. (முதல் வஸ்துவேதான் 2-வது வஸ்து) 2-வது வஸ்துவைக் காட்டிலும் 3-வது வஸ்து வேறல்ல. (இரண்டாவது வஸ்துதான் மூன்ருவது வஸ்து.) இப்படி இருக்குமாஞல் முதல் வஸ்துவைக் காட்டிலும் 3-வது வஸ்துவும் வேறலல. (முதல் வஸ்துவேதான் 3-வது வஸ்துவும்) எனவே ஈசுவரன் =ஜகத். Q. E D.

### ஈசுவரனின் ஸர்வவ்யாபகத்வம்

சிருஷ்டி கதையை உபநிஷத் பைபிள் இவைகள் கூறுவன. இந்த வாதத்தைத் தவிர எல்லா ஆஸ்திகர்களும் ஆர்யஸமாஜினரும் ஒப்புக்கொள்ளும் ஈசுவரனது ஸர்வ வ்யாபகத்வததிலிருந்து அத்வைத ஸித்தாந்தத்தை ருஜுப்பண்ணலாம். இது இருவகையாக இது கணித ஸித்தாந்தமான 2 + 2 = 4 என்ற மாதிரி.

ஈசுவரனை ஸர்வவ்யாபி सर्वव्यापी அல்லது ओतप्रोत (எங்குமுள்ளவர்) என்றபொழுது என்ன அர்த்தம்? சாதாரணமாக தினசரி நாம் உபயோகிக்கும் சாதாரண வார்த்தைகள்கூட வேதாந்த ஸித்தாந்தத்தை ஒட்டியவை. உதாரணம்:— ஒரு குடம், ஒரு வேஷ்டி, ஒரு தங்க ஆபரணம் இவைகளுள் யாரிருக்கிறுர்கள். அவைகளைச்சுற்றி இருப்பது எது? அது குயவன், நெசவன், தட்டானல்ல. ஆனால் மண் நூல் தங்கம் முதலியவையே அவைகளைச் சுற்றியிருப்பவை. இந்த சாமான்களின் நீளம், அகலம், கனம், உயரம் ஆழம் முதலியவை உள் சாமான்களே! எனவே பண்ணுபவனல்ல. பண்ணப்படும் பொருளே சாமான்களைச் சுற்றியும் உள்ளும் புரமுமிருக்கின்றன. ஈசுவரனது ஸர்வவ்யாபகத்துவத்திலிருந்து ஈசுவரனே இவ்வுலகங்களின் மூல பிரகிருதி.

வேறெருவரும் சிருஷ்டி செய்திருக்கமுடியாததால் அவரே சிருஷ்டிகர்த்தா எனவே அவரை வேதாந்தத்தில் अभिन्ननिमित्तोपादानकारणं (அதின் சிருஷ்டி கர்த்தாவும் சிருஷ்டி ப்ரகிருதியும் ஒன்றே) என்கிறது அவர் சிருஷ்டி கர்த்தாவென்பது உண்மையாலுைம் சிருஷ்டிப்பிரகிருதியும் அவராதலாலேயே ஈசுவரனை ஸர்வவ்யாபி என்கிறேம்.

இரண்டாவது கேள்வி அவர் எப்படி ஸர்வவியாபி?

[1] क्षेत्रज्ञं चापि मां विद्धि सर्वक्षेत्रेषु भारत ।

(ஒவ்வொரு சரீரத்தினுள்ளும் நானே ஆத்மாவென்றறி) எல்லா ஆஸ்திகர்களும் அவரது ஸர்வவ்யாபகத்தை ஒத்துக்கொள்ளுகிறுர்கள். ஒரே இடத்தில் இரண்டு பொருள்களிருக்க முடியுமா? பிரகிருதி சாஸ்திரபிரகாரம், ஒரு அணுப்பிரமாணமுள்ள இடத்தில் இரண்டு வஸ்துக்களிருக்கமுடியாது. அந்த இம்மி

1. கீதை 13-3.

பிரமாண இடத்தில் இருவருளரென்றால், ஒன்றே இரு பெயருடனிருக்கவேண்டும். ஓரிடத்தில் ஸ்ரீ ராமர் ராவணனை கொன்றாரென்று கூறி மற்றோரிடத்தில் ஸீதாபதி வென்றாரென்றால், அவர்கள் இருவரல்ல, ஒருவருக்கே இருபெயர்களென்றர்த்தம் அதேமாதிரி, ஈசுவரன் ஓரே காலத்தில் ஒவ்வொரு அணுவுள்ளு மிருக்கிறானென்றால், அவர் ஒருவரே உலகெலாமிருக் கிறார் என்று அர்த்தம். Q. E D.

## மாயை

இனி மாயாவாதத்தை ஆராய்வோம். ब्रह्म सत्यं जगन्मिथ्या (ஈசுவரனே ஸத்யம் மற்றதெல்லாம் அஸத்யம்) என்பதற்கு என்ன பொருள்? நாம் வசிக்கும் உலகம் பொய்யா? இங்கு மூன்று நுண்ணிய பதங்கள் 1 ஸத் 2 அஸத் 3 மித்யை இவைகளின் நுட்பமறியாமல் பல தவறுகள் விளைகின்றன. இந்த தப்பபிப்ராயங்களாலேயே மாயாவாதிகள் சாதாரண அறிவுகூட இல்லாதவர் களாக கண்டிக்கப்பட்டிருக்கின்றனர். ஸம்ஸ்கிருத வார்த்தையான "மித்யா" என்பதற்கு அஸத் என்று பொருளல்ல. பொய் சொல்லித் தன் காரியங்களால் மற்றோரை ஏமாற்றுவதல்ல. நாம் இவ்வுலகிலுள்ள உண்மைபோலுள்ள அனுபவங்களிலீடுபடுவதை மறுக்க வில்லை இவை என்ன வென்பது தன் மனதினாலேயே நிர்ணயிக்கப்படவேண்டும். ஒரு பொருளை ஆராய்வோம். நாம் அதைப்பார்த்து அல்லது கேட்டு முகர்ந்து, தொட்டு, ருசித்து மனதால் அறிகிறோம். எனவே ஆறுவித அனுபவங்கள். அத்தனையும் ஒருவன் மனதைப்பொருத்தே வெளியிலிருந்து வரும் எந்த சான்றும் நம் மனதுக்குள் வாங்கிப் பிறகே அனுபவங் களாகின்றன. எம்மாதிரி தோன்றுகிறதோ அதைப் பார்க்கிறோம். அனுபவிக்கிறோம் அதின் உண்மையான தன்மையை எப்படி பார்க்கிறது, கேட்கிறது, அனு பவிக்கிறது? எனவே நாம் பார்ப்பதெல்லாம் நமது

மனதின் பிரதி பிம்பமே ஆகவே, மதுசூதன ஸரஸ்வதீ தனது 'அத்வைதஸித்தி' என்ற கிரந்தத்தில்,

मिथ्यात्वं सत्वासत्वाभ्यामनिर्वचनीयत्वम् ।

(எதை ஸத்யமென்று ஒப்பமுடியாதோ இல்லையென்று தள்ளமுடியாதோ அது மித்யை என்கிறார்.

## பிம்ப - பிரதிபிம்ப வாதம்

இன்னும் தெளிவுற ஒரு வஸ்துவிற்கும் அதின் பிரதி பிம்பத்திற்குமுள்ள ஸம்பந்தத்தை ஆராய்வோம். ஒரு பையன் ஒரு நிலைக்கண்ணாடியில் தன் முகத்தைப் பார்க்கும்பொழுது வலது இடது மாறியிருப்பதைப் பார்க்கிறான். தன்னைப்போல ஒருவனைப் பார்க்கிறான். கண்ணாடிக்குள் அவனைக் கண்டுபிடிக்க முயலுகிறான். இந்த அனுபவத்திலிருந்து பிரதிபிம்பம் சரியன்று என்கிறான். ஆனால் இது அஸத்கல்ல இல்லாததை இருப்பதாகப் பண்ணவில்லை—பிரதி பிம்பத்தைப் பார்த்த பின்னரே, அதை சரியல்லவென்று கண்டுபிடித்தான் அதே சமயத்தில் இது இல்லை என்பதல்ல. திரும்பவும் கண்ணாடி முன்போகவே, அந்த உண்மையற்ற பையனைப் பார்க்கிறான் எனவே பிரதிபிம்பமானது ஒரு அனுபவத்தின் அம்சமே அதேசமயம் அது ஒரு வஸ்து வின் பிரதிபிம்பமே, ஸ்வதாவாக அது இருக்கவில்லை. இதையே உண்மையன்று என்று திருஷ்டி வெளிச்ச கணித சாஸ்திரத்தில் (Geometrical Optics) கூறுகிறோம்.

வேதாந்த மித்யாவிற்கு இதே பொருள் அதாவது, இரண்டு வஸ்துக்களின் அன்னியோன்ய சம்பந்தத்தில் ஒன்றிருப்பது மற்றொன்றாலே-ஆனால் ஒன்றில்லாவிடினும் மற்றொன்றிருக்கும் அதை बिम्बप्रतिबिम्बभाव (ஒரு வஸ்துவிற்கும் அதின் பிரதி பிம்பத்திற்குமுள்ள சம்பந்தம்) என்கிறோம்.

1 பிரதி பிம்பம் பிம்பம் இருந்தால்தான் ஏற்படும் ஆனால் பிரதிபிம்பமன்றி பிம்பம் உண்டு.

2 பிம்பத்தின் ஒவ்வொரு மாறுதலும் பிரதி பிம்பத்தில் தெரியும் கண்ணாடியை எவ்வளவு அசக்கினாலும், பிரதிபிம்பம் அசையுமே தவிர மனிதனது முகம் அசையாது.

3 எதிர் எதிராக இரண்டு நிலைக்கண்ணாடிகளிருந்தன ஒருமனிதன் மத்தியில் நின்றால் இரண்டு கண்ணாடிகளிலும் இவனுடைய பிரதிபிம்பம் தென்படும் ஒரு வஸ்துவுக்கு பல பிரதிபிம்பங்களுள ஆனால் ஒரு பிரதிபிம்பத்திற்கு பல பிம்பங்கள் கிடையாது இந்த மூன்று நிபந்தனங்களை நம் முன் உள்ள வாதத்தில் உபயோகப்படுத்துவோம்.

1 ஈசுவரன் எக்காலமும் ஸ்வதந்திரமாயிருப்பவர் 2 மற்றவையெல்லாம் பிம்பத்திலிருந்து ஏற்பட்ட பிரதி பிம்பங்கள் மாதிரி அவனன்றி இருக்கமுடியாது. இதைத்தான் மித்யா என்பது பிம்பமும் பிரதிபிம்பமும் ஒன்றே ஏனெனில் பின்னுள்ளது முன்னுள்ளதினாலேயே ஏற்பட்டது எனவே பின்னது மித்யை ஆனால் முன்னது உண்மையானது.

### பரிணாமவாதம்—பிரதிபிம்ப வாதம்—விவர்த்த வாதம்

1 ஒரு கேள்வி எழலாம். ஸ்ரீ வல்லபாசாரியாரது பரிணாமவாதத்தின் பிரகாரம் உலகிலுள்ள வஸ்துக்கள் ஈசுவரனது காரியங்களே என ஏன் கொள்ளக் கூடாது? அதற்கு பதில் சுக்லயஜுர் வேதத்தில் முதல் உபநிஷத்தான ஈசாவாச்யோபநிஷத்தில் சாந்தி மந்திரம் இதோ:—

पूर्णमदः पूर्णमिदं पूर्णात्पूर्णमुदच्यते ।
पूर्णस्य पूर्णमादाय पूर्णमेवावशिष्यते ॥

(அவர் பூர்ணர், இப்பூமண்டலத்திலுள்ளதெலாம் பூர்ணம். அவரிடமிருந்தே வெளிவந்தன. இவை

எல்லாம் வெளிவந்தும் அவர் பூர்ணரே) பரிணாமவாதத்தில் களிமண், நூல், மரம் தங்கம் வெளியே குடம் வேஷ்டி, நாற்காலி சுவர்ண ஆபரணமாக அழகிய உருவங்களில் தென்படினும் அதேசமயத்தில் மண் நூல் மரம் தங்கமாகவே இருந்து வருகின்றன. ஆமாம். உருவமுள்ள வஸ்துக்கள் வெளித்தோற்றத்தில் முதலிலிருந்த அவிபாகமான (Raw) நிலையிலில்லையே மேற்கூறிய சாந்தி மந்திரப் பிரகாரம் ஜீவர்களாகவும் இதர உலகங்களாகவும் வெளிவந்தும் ஈசுவரன் பூர்ணமாகயிருக்கிறார். பரிணாமவாத பிரகாரம் விகிருதியாக மாறினவை பிரகிருதி மாதிரி தென்படவில்லையே. மொத்தம் மட்டுமே மாறாத நிலை பாகங்கள் மாறிவிட்டன. ஆனால் இங்கோ பணப்பெட்டியிலுள்ள பத்து லக்ஷம் ரூபாய்களையும் எடுக்கிறாய், அப்பெட்டியிலோ பத்துலக்ஷம் ரூபாய்களும் இருக்கின்றனவே! இந்த ஆச்சரியத்தை விவர்த்த வாதத்தை ஒட்டி எல்லாமே ஆரோபம் (மயக்கம்) (கயிரில் பாம்பைக்கண்டமாதிரி) என்றாலே நம்மால் திருப்தியடைய முடியும், அல்லது பிரதிபிம்பவாதம் மாதிரி எத்தனையோ பிரதிபிம்பமானவைகளை எடுத்தாலும் குறையாது. ஈசாவாச்ய உபநிஷத் சாந்தி மந்திரமும் பரிணாமவாதத்தை ஒப்புக்கொள்ளவில்லை.

2 ஈசுவரன் வஸ்துவாக மாறினாலதன் மறைவு ஈசுவரனது மறைவைக் குறிக்கும்! மற்ற வஸ்துக்கள் இருக்கின்றன என்றால் ஈசுவரன் பாதி இறந்ததாகவும், பாதி உயிருடனிருப்பதாகவுமாகும்! அத்வைதத்தில் இக்குற்றங்களில்லை. எத்தனை பிரதிபிம்பங்கள் இறந்தாலும் பிம்பத்திற்கு நாசமில்லையே.

3 பரிணாமவாதம் சரியானால், ஈசுவரன் உலக வஸ்துக்களாகிறான் 'பின் ஜகத் நித்தியமே' பின் ஏன் வேதாந்தம் நாமரூபாத்மக ஜகத் ஞானத்தை அக்ஞானமாகவும் ப்ரமையாகவும் மோகமாகவும் கண்டிக்கிறது? தவிரவும் வர்ணாசிரம தர்மம், உபாசனை, ச்ரவணம், மனனம், நிதித்யாசனம் மூலமாக உலக ப்ரக்ஞையை

அகற்றி ஈசுவர சாக்ஷாத்காரத்தில் சதாகாலமும் வீற்றிருக்க வேதாந்தத்தில் ஏன் உபதேசிக்கவேண்டும்?

4 நான்காவதாக, ஸ்ரீமத் பாகவதத்தில் ராஸ-பஞ்சகத்தில் பிம்ப பிரதிபிம்ப வாதத்தை அனுஸரித்து

यथार्भक ... स्वप्रतिबिम्बविभ्रमः ।

(ஈசுவரனுக்கும் பிரம்மாண்டத்துக்குமுள்ள சம்பந்தத்தை ஒரு பாலன் தன் பிரதிபிம்பத்துடன் விளையாடுவதுபோல) என்று கூறப்பட்டிருத்தல் இந்த வாதத்தை பலப்படுத்துகிறது.

ஸ்ரீ சங்கரபகவத்பாதர் இந்த மாயா வாதத்தையும், விவர்த்தவாதத்தையும் உத்பத்தி செய்தாரென்ற வைஷ்ணவர்களின் அபவாதத்திற்கு ஒரே பதிற்ருன் அவர்கள் சாட்டும் குற்றம் ஆதாரமற்றது வேதங்கள் பகவத்கீதை, ஸ்ரீ வைஷ்ணவர்கள் போற்றும் ஸ்ரீமத் பாகவதம் இவை விவர்த்தவாதத்தை ஆமோதிக்கின்றன. இவைகளையே ஆதாரமாக ஸ்ரீ சங்கரபகவத்பாதாள் கொண்டார்.

[1] मायां तु प्रकृतिं विद्यान्मायिनं तु महेश्वरम् ।

[2] अज्ञानेनावृतं ज्ञानं तेन मुह्यन्ति जन्तवः ।

[3] नाहं प्रकाशः सर्वस्य योगमायासमावृतः ।

[4] दैवी ह्येषा गुणमयी मम माया दुरत्यया ।

मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति ते ।

மாயையை ஜகத்காரணமாகவும், ஈசுவரனை மாயாவியாகவும் அறிந்துகொள்

ஞானத்தை அஞானம் மூடியிருக்கிறது எனவே எல்லா ஜந்துக்களும் மோஹமடைகின்றனர்.

---

1. சுவேதா. உப. 4-10. 2. கீதை 5-15.
3. கீதை 7-25. 4. கீதை 7-14.

யோக மாயையால் மூடப்பட்டதால் என்னை எல்லோராலும் பார்க்கமுடியவில்லை.

இந்த மூன்று படுதாக்களுள்ள எனது திவ்ய மாயையைத் தாண்டுவது சிரமம், என்னை அண்டுவோரே இந்த மாயையைத் தாண்டமுடியும்.

मायां ततान जनमोहिनीम् ।
मन्यमान इदं सृष्टमात्मानमिह सज्जते ।
यदिदं मनसा वाचा चक्षुर्भ्यां श्रवणादिभिः ।
नश्वरं गृह्यमाणं च विद्धि मायामनोमयम् ॥

அவர் எல்லாரையும் மயக்கும் மாயையை பரத்துகிறார்.

சிருஷ்டிக்கப்படும் ஜகத்தை ஆத்மாவாக எண்ணி அவன் அவைகளில் பற்றுடையவனுனன்.

எதையெல்லாம் உன் மனதாலோ வாக்காலோ கண்களாலோ காது முதலியவைகளாலோ நீ பற்றினையோ அவை எல்லாம் மாயையே. மனோ பிராந்தியே அழியப்படுவனவே.

இவைகளிலும் ஸ்பஷ்டமான வாக்கியங்கள் வேண்டுமா ? ஸ்ரீமத் பாகவதத்திலிருந்து ஒரு ச்லோகம்

रज्ज्वामहेर्भोगभवाभवौ यथा ।

(எப்படி கயிரில் பாம்பு தோன்றி மறைந்ததோ) இங்கே விவர்த்தவாதம் ஒப்புக்கொள்ளப்படுகிறது.

இந்த ஸித்தாந்தத்தை எந்த உபமானத்தால் ஸ்ரீ சங்கரபகவத்பாதாளும் இதர அத்வைதிகளும் நிருபணம் செய்கின்றனரோ, அதே உபமானத்தைப் படிக்கிறோம்! இனிமேல் நாம் வற்புறுத்த வேணுமா ? திருஷ்டி சாஸ்திர மாயைகள் (Optical Illusions)

பிரகிருதி சாஸ்திரத்திலுள. தவிர கனவுகளும், அநிருத்மான நிலைக்கண்ணுடி பிரதிபிம்பங்களும், நவீன வான சாஸ்திர கணிதத்தில் சூரியோதயமும், சூரியாஸ்தமனமுமே (பூமியிலிருந்து) திருஷ்டி மாயைகளே என்கிறது.

## இலக்கண பிராமாண்யம்

ஆத்மாவின் அத்வைதத்தைப்பற்றி இன்னுமொரு சான்றை ஹாஸ்யமாயினும் பூர்ண கவனத்துடன் ஆராய்வோம். எல்லா பாஷைகளிலுமுள்ள ஒரு விசேஷமிது, ஆனுல் பலர் கவனிக்காததே. ஸம்ஸ்கிருத வியாகரணத்திலும் உலகிலுள்ள எல்லா பாஷைகளிலும் பிரதிப்பெயருடைய (Pronoun) முதலாவது இரண்டாவது மூன்ருவது இவற்றின் பன்மைகளை ஆராய்வோம்.

முதலில் மூன்ருவது பிரதிப்பெயரான 'அவன்' 'அவள்' 'அது' இவைகளின் பன்மையை நோக்குவோம். அவர்கள், அவைகள் என்பதே இதன் பன்மை அவர்கள் என்பதில் அவன் + அவன் + அவன் அல்லது அவள் என்பதும், அவைகள் என்பதில் அது + அது + அது என்பதும் அடங்கியுள்ளன. இதே மாதிரி இரண்டாவது பிரதிப் பெயரான 'நீ' என்பதை எடுத்துக்கொள்வோம். நீங்கள் என்பதே இதன் பன்மை. இதில் அடங்கியுள்ளது நீ + நீ + நீ என்பவை. அடுத்தபடியாக முதலாவது பிரதிப்பெயரான நான் என்பதற்கு பன்மையில் நாங்கள் என்று சொல்கிரேம் தீர விசாரிக்கின் இது பொய்யான பன்மையே ஏனெனில் அவர்கள் (அவன்–அவன்–அவன்) நீங்கள் (நீ–நீ–நீ) என்பதுபோல் நாங்கள் என்பதற்கும் நா+நான்+நான் என்றுதான் விளக்கம் கூறவேண்டும். ஆனுல் இப்படிக் கூறமுடியாது நீ என்பதிலும் அவன் என்பதிலும் அநேகம் உண்டு. நான் என்பதிலோ அநேகம் கிடையாது. நான் என்பது ஒன்றுதான். ஆகவே நான் என்பதைப் பன்மையில் உபயோகிப்பது கபடமும் வஞ்சனையுமே (Fraud) நாங்கள் என்று உலகில்

கூறுவதற்கு நான்–அவன்–அவன் என்றுதான் விளக்கம் கூறவேண்டும்.

ஏற்கனவே "நான்" எனும் பதமுபயோகிக்கும் பொழுது அது உண்மையாக "ஆத்மா" வையே குறிக்கிறது என்று தீர்மானம் செய்திருக்கிறோம். ஸ்ரீ சங்கரபகவத்பாதாளும் தனது பிரம்ம சூத்திர பாஷ்யத்தில் முதல் வார்த்தையாக युष्मदस्मत्प्रत्ययगोचरयोः ஆத்மாவிற்கு வரையறுப்பு வாக்கியமாக (Definition) உபயோகித்திருக்கிறார் இதற்குக் காரணம் நமது நினைவெலாம் நமமுள்ளுள்ள ஆத்மாவினதே மற்றையது எல்லாம் அனுமானமே அதாவது, உண்மையான பிரத்யக்ஷ உணர்வு (அறிவு) அனுபூதி அறிவு (கார்டினல் நியூமனும் ஸ்ரீ சங்கரரும் ஒத்துக்கொண்டமாதிரி) நமது உளளுளள ஆத்மாவதே அதாவது (முதல்) முன்னிலையான பெயரே (நான்) முதல் பெயரைப்பற்றி உலகிலுள்ள பாஷைகளிலெல்லாம் இலக்கணத்தில் "நாம்" என்றால் பல நான்களல்ல என வற்புறுத்துவதை ஆராய்ந்தோம் இரண்டு நான்கள் கூடக்கிடையாது நானென்றால் அசம்பாவதத்தில் மோசடியான, நாமெனச் சொல்லுகிறோம் ஆனால் ஸத்யமாக "நானின" பன்மையாகாது. எனவே ஆத்மா ("நான்" எனும் பதத்தால்) பலவாகத்தோனறினும் உண்மையில் ஒன்றே. Q E. D.

எனவே பரமாத்மா ஜீவாத்மா ஜகத் (ஈசுவரன் ஜீவன்–ஜகத்) என்ற மூனறும பல வெளித்தோற்றங் களாயினும அடிப்படையில் ஆத்மா ஒன்றே. எனவே அபரோக்ஷானுபூதிக்கு இலக்கண சாஸ்திரமும உபயோகப்பட்டது.

## விருத்தியில் ஒரே தன்மை

இந்த இடத்தில் கேட்கலாம். 'ஈசுவரனும் நாமும் ஒன்றானல் அவரும் நாமும் இப்படி அஸமானமாக (வெவ்வேறாக) ஏன் இருக்கிறோம்? இந்த பிரச்னை

எழக்கூடியது தான். ஆனுல் சரியாக அவரும் நாமும் ஒன்றென மனனமும் நிதித்யாசனமும் செய்யாத தாலேயே நம்மிருவருக்குமுள்ள விருத்தி (Functional Identity) ஒற்றுமையை மறந்தோம். முன் விசாரிக்கப் பட்ட பாத்திரமும் த்வாரமும் எப்படி த்வாரமூலம் சூரிய கிரணம் உள் வந்தது. உதாரணத்தை நினைவுறுத்தினுல் நிச்சயமாக ஈசுவரனைப்போலவேதான் நாமும் விருத்தியில். ஆனுல் சரீரம், புலன்கள், மனது, புத்தி இவை எல்லாம் படுதாக்களாக உள்ளிருக்கும் அவனை பார்க்கவொட்டாது போராடுகின்றனவே. இப்பொழுது நாம் சதாகாலமும் என்ன செய்துகொண்டிருக்கிருே மென்பதை கவனிப்போம்.

சூரியன் அஸ்தமிக்கும்பொழுது அவரது கிரணங்கள் எங்கே போகின்றன? நீ சொல்லலாம் அவர் போகும்பொழுது கிரணங்களையும் கூடவே கொண்டுபோய் விட்டார் என்று. ஆமாம் இது அவருள் உள்ள கிரணங்களுக்கே பொருந்தும் ஏற்கனவே வெளியில் வீசப்பட்ட கிரணங்கள் என்ன ஆயின? இல்லை அவைகளையும், கூட இழுத்துச் செல்கிருர் ஆகவே பட்டுப் பூச்சி மாதிரி தன் கிரணங்களை உள்ளே இழுக்கிருர். நாம் தூங்கும்பொழுது நமது வெளி அனுபவங்களை உள்ளே இழுக்கிருேம். சில சமயம் இந்த தாறுமாருன (கலங்கிய) எண்ணங்களிலீடுபடுவதே கனவுகளாகின்றன, சில சமயம் எங்கேயோ பத்திர மாக நம்முள்ளே வைத்திருக்கிருேம், அப்பொழுது நல்ல தூக்கமெனலாம். விழிக்கவும் பட்டுப்பூச்சிமாதிரி சூரியன் கிரணங்களை வெளிவிடுவதுமாதிரி உள் புதைந்த எண்ணங்கள் நம்மிடம் தாண்டவமாடுகின்றன என்ன நாம் செய்துகொண்டிருக்கிருேம்? பரமாத்மா (ஈசுவரன்) செய்வதும் இதுதானே ஒவ்வொரு இரவும் நாம் தூங்கி விழிக்கும்போது பிரளயத்தில் தூங்கி சிருஷ்டியில் எழும் ஈசுவரன்போல வெளி உலகை நாசம் செய்து புனர் சிருஷ்டி காலையில் செய்கிருேம்.

இம்மாதிரி ஈசுவரனது சிருஷ்டி பாலனம் நாசம் என்ற மூன்று விருத்திகளையும் தினசரி செய்கிறோம் இன்னும் என்ன விருத்தி ஒற்றுமை வேண்டும்?

தூக்கத்தையும் விழிப்பையும் தள்ளுவோம். விழிப்பிலேயும் இந்த ஈசுவரனது மூன்று விருத்திகளும் நடக்கின்றன. சிலசமயம் விளக்கை அணைத்து படுக்குமிடத்தை இருட்டாக்கி தூங்கும் முன் கண்ணை மூடி உன் இறந்த அன்னையோ பிதாவோ நண்பரோ அல்லது மற்றெவரோ அவர்கள் உருவத்தை மனதில் நினைத்துப் பார்க்கையில் அவர்கள் மூர்த்தி (உருவம்) உன் முன் தோன்றுகிறது. சங்கல்பபலமும் மனன சாமர்த்தியமுமிருப்பின் அவரது மூர்த்திகளை நீயே சிருஷ்டிக்கிறாய், அது சிருஷ்டியல்லவா? அல்லேல் இருட்டறையில் எப்படிப்பார்க்கிறாய்? அதுவும் மூடின கண்களுடன்?

நீ விழித்திருக்கும்பொழுது வெளிச்சமுமிருந்தும் கண்ணை மூடிப்பார்க்கமாட்டேனெனில் ரூபம் தோன்றாது வேறொரு பொருளின்மீது மனம் சென்றிருந்தால் கண்களும் காதுகளும் திறந்திருந்தாலும் ஒன்றையும் பார்க்கமாட்டாய், கேட்கவும் மாட்டாய். திருடன் வந்து உனது விலையுயர்ந்த சாமான்களைத் திருடுவதும் உனக்குத் தெரியாது.

ஸ்ரீகிருஷ்ணகர்ணாம்ருதத்தில் ஒரு அழகிய ச்லோகம் ஸ்ரீ கிருஷ்ணனது லீலையை வர்ணிக்கிறது. ஒருகோணத்தில் ஸ்ரீ பாலகிருஷ்ணலீலை; தத்துவார்த்தத்தில் பார்த்தால் நாமிங்கு ஆராயும் ஸித்தாந்தத்திற்கு ஒட்டியது.

मातः किं यदुनाथ देहि चषकं किं तेन पातुं पय-

स्तन्नास्त्यद्य कदाऽस्ति वा निशि निशा का वाऽन्धकारोदये ।

आमील्याक्षियुगं निशाप्युपगता देहीति मातुर्मुहु-

र्वक्षोजांशुककर्षणोद्यतकरः कृष्णः स पुष्णातु वः ॥

பகவானது வளர்ப்புத் தாயாரான ஸ்ரீ யசோதை ஒவ்வொரு நாளும் சில சமயங்களிற்றான் பால் கொடுப்பாள். ஒருநாள் எதிர்பாராத நிலையில் அசாதாரணமான வேளையில் பாலகிருஷ்ணன் பால் கேட்டான்.

யசோதை சொன்னாள்: 'இப்பொழுது கிடையாது'

ஸ்ரீ கிருஷ்ணன் : 'பின் எப்போ ?'

யசோதை : 'இரவிலே'

ஸ்ரீ கிருஷ்ணன்: 'இரவு எது ?'

யசோதை : 'இருட்டு புகும்பொழுது'

இதைச் சொன்னவுடனேயே தன் கண்ணை மூடிக் கொண்டு பகவான் சொன்னார் 'அம்மா இருட்டிவிட்டதே, இப்பொழுது பால் கொடேன்'

பல நூறு பேர்களுக்கு ஒரு விஷயம் தெரிந்தாலும் உன் மனது அதிலில்லையானால் உனக்கு அது தென் படாது. எனவே மனதில்தான் இவ்வுலகுத்தோற்றங்க ளெல்லாம் பார்க்கும்பார்வையோ கேட்கும் சப்தங்களோ எல்லாம் நமது மனமெனும் கருவி மூலமே. அது நிர்ண யிப்பதே சரியும் தப்பும். எனவே நவீன மேநாட்டு தத்துவ சாஸ்திரங்களில் பழய சார்வாக ஸித்தாந்தமும் ஸர். வில்லியம் ஹாமில்டனுடைய சார்வாகனுக்கு மேல் பட்ட (Transcendental Realism) ஸித்தாந்தமும் பறந்துபோயின. சிந்தனாவாதம் ஐரோப்பாவில் (மாயாவாதம்) (Idealism) ஒப்புக்கொள்ளப்பட்டு வரு கிறது ஐயர்லாந்து தேசத்தில் பிஷப்பெர்க்லியே இந்த சிந்தனாவாதத்திற்கு முதல் பலம் கொடுத்தார்.

இக்கால பேரறிஞர்களான கார்லைல், எமர்ஸன், காண்ட், ஹெகெல் தாமஸ் ஹில் க்ரீன் பேராசிரியர் டாய்ஸன் முதலியோர் சிந்தனைவாதிகளே. ஐரோப்பா

விலும் அமெரிக்காவிலுமுள்ள 'புது சிந்தனை' (New Thought) ஸித்தாந்தத்தினர்களான ரால்ப் வால்டோ ட்ரீனே, மார்டென் டாக்டர் ஸிட்னிப்ளவர் எல்லா வீலர் வீல் காக்ஸ், வில்லியம்வாகர் அட்கின்ஸன் பேராசிரியர் ஜேம்ஸ் R. கென்னி முதலியோரும் சிந்தனை சித்தாந்தத்தினரே முன் கூறியமாதிரி இவர்களெல்லாரும் மாபெரும் மேதாவியான, ஜெர்மன் தேசத்திய இம்மானியுவேல் காண்டும் ஸ்ரீ சங்கரபகவத் பாதரது சிகரத்தை எட்ட அஞ்சுகின்றனர். இதற்குக் காரணம் பல நூற்றுண்டுகளாக சார்வாக ஸித்தாந்தத்தில் ஊறினவர்கள் தவிர இந்த மார்க்கத்தில் புதிதாக நடக்கிறவர்கள் எனவே ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலுமுள்ள சிகரமான தத்துவஞானிகள் ஸ்ரீ சங்கர பகவத்பாதரது அத்வைதத்தை அங்கீகரிப்பர் என எதிர்பார்க்கப்படுகிறது.

## நமக்கு என்ன வியாதி?

இவ்வாறு ஆராய்ச்சியால் நமது இயல்பான சத்திய சுவபாவம் வெளிவருவதுடன் நமது வியாதியை ஸ்வஸ்தப்படுத்தும் மாமருந்தும் கைகூடும். அத்வைத ஸித்தாந்தத்தில் இவ்வுலகெலாம் அநித்தியம் எவ்வளவு நாம் கல்பனை செய்கிறேமோ அதைப் பொருத்திருக்கிறது. நாமே அதை சிருஷ்டிக்கிறோம், அழிக்கிறோம் ஆத்மாவும், மனதும் என்னவென்பதை நன்குணர்ந்த பின் நாம் இனி, மனதைப்பிடித்து சிறகை கத்தரித்து, வெளிநோக்கும் குணத்தைத் தடுத்து ஆத்மாவை நோக்கித் திருப்பி அங்கிருக்கச் செய்வதே. வேதத்தில்

**मन एव मनुष्याणां कारणं बन्धमोक्षयोः ।**

(மனமே அடிமைத்தனத்திற்கும் மோக்ஷத்திற்கும் காரணம்) உதா:- ஒரு மன்னன் செல்வத்தில் பிரளலாம் எனினும் சந்தோஷமற்றிருக்கலாம். ஏழை யும் திருப்தனுகி ஆனந்தத்திலிருக்கலாம் எதில் இருவருக்கும் வித்தியாசம்? வெளி விஷயங்களாலேயே

ஆனந்தமெனின் ஏழைக்கு தனமில்லையே! எப்படி அவன் ஆனந்தமாயிருக்கிறான்? செல்வச் செழிப்பில் உள்ளோர் ஏன் துயரக்கடலில் தவிக்கின்றனர்?

நவீன வாழ்க்கையில் வேண்டாத வஸ்துக்களின் மேல் ஆசையை உண்டுபண்ணி வஸ்துக்களின் செழிப்பே தேவையை உற்பத்தி செய்கிறதென்கிறோம். இது சரியல்ல, எப்பொழுது உனது தேவைகளை மிகைப் படுத்துகிறாயோ, அப்பொழுது உன் ஆனந்தத்தை வகுக்கிறாய். வகுக்கும் தொகை அதிகரித்தால் வகுக்கப் பட்டது குறையுமே ஈவானது குறைகிறது.

ஸார்டர் ரிஸார்டஸ் என்ற நூலில் அழகாக கார்லைல் எழுதினார் 'ஒரு பின்னத்தின் மதிப்பு வகுக்கப் படுவது அதிகரிப்பதிலல்ல, வகுக்கும் தொகையைக் குறைப்பதிலேயே நாமோ நமது தேவைகளை மிகைப் படுத்திக்கொண்டே போகிறோம் பலன் துக்கமே! எனவே வாழ்க்கையின் தேவைகளைப் பற்றிய மனோ நிர்ணயமும், எவ்வளவு செழிப்பான வாழ்க்கை வேணு மென்பதுமே நமது கவலைகளுக்குக் காரணம்.

மாதம் ரூ 50ல் திருப்தியான வாழ்க்கை நடத்தியவன் ரூ. 1000 வரை உயர்ந்து, ரூ. 500. பென்ஷன் வாங்கிலும் சவுகரியமாக வாழவில்லை. ஏனெனில் அவன் மனது உயர்ந்த வாழ்க்கையில் மயங்கி அதற்காகவுள்ள அல்லல்களுக்கடிமையாகிறது. தேவை குறையக்குறைய, நமது ஆனந்தம் அதிக மாகிறது. எளிய வாழ்க்கையிலும் சீரிய சிந்தனையிலு மீடுபட்டால் ஆனந்தமதிகம் எதிர்பார்த்தது கிட்டாவிடில் ஏமாற்றம். துக்கம். கிடைப்பது கிட்டட்டுமென்றிருந் தால் எந்த கஷ்டமும் நம்மை சோர்வில் கொண்டு விடாது. எனவே எல்லாம் நம் மன பரிபாகத்திலேயே இன்பமேவரினும் வருக துன்பமேவரினும் வருக பெருவாழ்வுவரினும் வருக அல்லது சிறுமைவரினும் வருக.

சென்னையிலுள்ள ஒரு தந்தையின் மகன் பம்பாயில் மாதம் ரூ. 500 சம்பாதித்தவன் மரணம் தெரிவிக்கப்படவில்லை என்று கொள்வோம். தந்தை நிம்மதியாக வாழ்கிறான், தகவல் கிடைத்ததும் துயரக்கடலில் மூழ்குகிறான் பத்திரிகையில் ஒருவன் இறந்தான் என்ற செய்தி வந்து பின் திருத்தம் வந்தாலும அது தெரியாவிடில் அவன் இறந்தானென்றதிலேயே நின்று வருத்தத்திற்காளாகிறான். எனவே, தந்தையின் சிந்தனையே வருத்தத்திற்கு காரணம் மகன் பிழைத்திருக்கலாம். அவன் மரணமோ பிழைப்போ தந்தையின் துக்கத்திற்குக் காரணமல்ல. அல்லது ஒருவன் உன்னை வாயாரத்திட்டுகிறான். அவன் உடம்பு நடுங்கலாம் உன் காது நடுங்காது எனினும் ஏன் துக்கப்படுகிறாய்? எனவே வெளி அவயவங்களிலில்லை துக்கம் உன் மனதில் அவன் திட்டுதலாலுதித்ததே துக்கம் மற்றொரு சம்பவம் வெகு தூரத்தில் இருவர் உனக்கு புரியாத பாஷையில் பேசுகின்றனர் ஏதாவது உன்னை நிந்தித்திருக்கலாமென எண்ணி வருத்தப்படுகிறாய் அவர்கள் பேசியது காரணமன்று உன் மனதில் ஏற்பட்ட உணர்ச்சியே துக்கத்திற்குக் காரணம் உனது குற்றமுள்ள நெஞ்சே உன்னைக் குரு, குரு, என்று பண்ணினது.

ஒரு திருடன் ஒரு போலீஸ்காரனைக் கண்டதும் ஓடி அவன்மேல் விழுந்து தப்பிக்கப்பார்க்கையில் பிடிக்கப்படுகிறான். அங்கும் அவனது குற்றமுள்ள நெஞ்சே அவனைப் பயங்காளியாக்கிற்று. தண்டனையிலிருந்து தப்பித்து ஓடினவனின் வாழ்க்கையில் சதா திகில்தான். பிடிபடுவதே அவனுக்கு நிம்மதியைத் தருகிறது. இந்த எல்லா உபமானங்களிலும் நம் மனதே எல்லாக் கவலைகளுக்கும் காரணமென அறிகிறோம்.

## வைத்தியநாத மருந்து

எனவே வேதத்திலிருந்து நமது ஆத்மாவின் உண்மை நிலை நமது லக்ஷ்யம் இவைகளை அறிந்து

நம்முள்ளிருப்பது ஆனந்தஸ்வரூபமே என அனுபவித்து மனன நிதித்யாஸனத்திலீடுபட்டு (அம்பு லக்ஷ்யத்தி லடிப்பதுபோல்) ஈசுவரனை அடைந்தால் இதோ இங்கே நமக்கு ஆனந்தம் அல்லது நமது துயரங்களிலேயே மூழ்கி இவைகளை மிகைப்படுத்துவோமாயின் துக்கத் திற்கே ஆளாவோம். ஏனெனில் ப்ரமரகீட (குழவி புழுவைக்கொட்டுகிற) நியாயப்படி எப்படி நினைக் கிறோமோ அப்படியே நாம் ஆகிறோம், அனுபவிக்கிறோம் இதையே நோயாளிகளுக்கு நவீன வைத்யர்கள் உபயோகிக்கின்றனர். நித்திரையை உபயோகித்தலும் மனதை வசப்படுத்துவதுமிதனாலேயே. புராணங்களில் ஹிரண்யாக்ஷன், ஹிரண்யகசிபு, ராவணன், கும்ப கர்ணன், கம்ஸன் முதலியோர் சாகுந்தருவாயில் ஈசுவரனை தரிசித்தனர். எப்படி? எப்பொழுதும் अपश्यत्तन्मयं जगत् ஈசுவரனையே சிந்தித்ததாலும், கனவிற் கண்டதாலும் ப்ரேமைமூலமில்லாவிடினும் பயத்தினாலும் வெறுப்பாலும் அந்த தரிசனம் கிட்டியது. என்ன காரண மாயினும் ஈசுவர சிந்தனையிலேயே இருந்ததாலும் அவரையே சதா நினைவிலிறுத்தியதாலும் இறுதி நிமிஷங் களில் தர்சனம் கிட்டிற்று. எந்த நிலையில் நினைத் தனரோ அப்படியே கிட்டிற்று. பக்தனோ அவரை பகவான், தந்தை, குரு என தியானிக்கிறான். அவ்வாறே பார்க்கிறான். சத்துரு என்று நினைப்போர் அவரை அவ்விதமே பார்க்கின்றனர்.

ஏற்கனவே கூறியபடி நடு வேனிற்காலம் பட்டப் பகலில் உன் கண்களை மூடிப் பார்க்கமாட்டேன் என் கிறாய் ஆனால் உள்ளே பிரகாசம் ஏற்பட்டால் உள்ளும் பார்க்கலாம், வெளியிலும் பார்க்கலாம் ஏனெனில் மனதல்லவா எல்லாவற்றையும் செய்கிறது. அந்த மனதை உன் வசமாக்கு லக்ஷ்யம் ஈசுவரனே நிச்சய மாய் ஈசுவரனை அடைந்து, பூர்ண வெற்றி பெறுவாய்.

பின்னும் எல்லோருக்கும் பெரிய ஈசுவரன் எது எங்கே? முடிவில் ஈசுவரனுடன் ஐக்கியமே, அந்த

ஈசுவரன் ஸர்வவ்யாபி எங்குமுளன், உள்ளும் உளன் உள்ளும் வெளியும் ஈசுவரமயமானால் நமது தேகத்தின் நிலை என்ன? அது ஒரு வெளி உறை ஆத்மாவின் கோசமே இந்த தத்துவத்தையுணர்ந்து தேகம் புலன்கள், மனது இவைகளிலிருந்து விலகி நின்று உள்ளுள்ள ஆத்மாவின் ஸ்வரூபத்தை அனுபவித்தால், நமது வெற்றி நிச்சயமே இத்தகையது நமது லக்ஷ்யம, அடையும் வழியும் அதி சுலபம் இதைவிட சீரிய லக்ஷ்யமெது? இதைவிட சுலபமான வழி ஏது?

## ஆக்ஷேபணைகளின் விசாரணை

இத்தறுவாயில் ஆமாம், நாமே சச்சிதானந்த ஸ்வரூபமாயின் அதாவது ஈசுவரனாயின் வெளிக் காரணங்களாலேயே அறியாமையும் துக்கமும் உபலக்ஷணங்களாயின் ஏன் முயற்சி செய்யவேண்டும்? அறியாமையும் துக்கமும் வெந்நீரின் சூடு மாதிரி வர வரக் குறைந்து நம்மை விட்டு நீங்காதா? அதற்கு பதில் வேறு உபத்திரவம் செய்யாவிடில் வெந்நீர் குளிர்ந்து விடும். ஆனால் அக்னியின் மேல் வைததால் குளிருமென்று சொல்லவில்லையே. அப்பொழுது மேலும் அதிக உஷ்ணமாகும். அதேமாதிரி துக்கத்திற்கு ஹேதுவான காரணங்கள். அதாவது அறியாமையும் பாபச்செயல்களும் தொடர்ந்திருந்தால் துக்கம் எவ்விதம் குறையும்? எப்படி நாம் நமது ஆதிலக்ஷணமான உள்ளும் வெளியும் ஆனந்தமயமாவோம்?

இங்கே கேட்கலாம். ஆமாம் ஈசுவரன் ஒருவரே ஸத்யம் மற்றதெல்லாம் மிதயை என்றிருக்குமானால் இரண்டு மிதயைகளான புண்ய பாபங்களில் ஒன்றைத் தேடி சம்பாதித்து மற்றதை ஏன் நீக்கவேண்டும்? இரண்டும் மித்யையானதால் இரண்டையும் நீக்க வேண்டியதுதானே! பதில் இதோ:—

कण्टकं कण्टकेनैव शरेण च यथा शरम् ।

உன் காலில் ஒரு முள் தைத்தால் அதனுலுண்டாகும் வலியை நீக்க என்ன செய்கிருய்? அதை ஒரு குண்டூசியோ ஊசியோ முள்ளோ அதால் எடுப்ப தில்லையா? இரண்டு முள்ளுகளுள் எது உயர்ந்தது என்பாயோ? இரண்டும் முள்ளுகளே, ஒன்று வலியை போக்குகிறது, மற்ருென்று வலிக்குக் காரணமாகிறது. அதேமாதிரி வைத்தியர் ஒரு விஷத்தை மற்ருெரு கொடிய விஷத்தால் (Antidote) நீக்குகிருர். இரண்டும் விஷமே. ஒன்று உயிரை நீக்கும் விஷம். மற்ருென்று உயிரைக்காக்கும் விஷம். அந்த மாதிரியே பாபமும் புண்யமும் மித்யையே. ஒன்று சாஸ்திரங்களாலும் அனுபவத்தாலும் துக்கத்தைக் கொடுக்கிறது. மற்ருென்று சாஸ்திரங்களாலும் அனுபவத்தாலும் இன்பத்தையும் ஆனந்தத்தையும் கொடுக்கிறது. துன்பத்திற்கு ஆக்ஷேபமில்லாவிடில் பாபத்திற்கும் ஆக்ஷேபமில்லை, இன்பம் வேணுமாயின் புண்யம் செய். முதல் முள் இரண்டாவது முள்ளால் எடுபட்டபின் இரண்டையும் வீசி எறிகின்ருேம். இதுபோல் பாபத்தை நீக்கிப் பின் புண்யத்தையும் திரஸ்கரிக்கும்படி நமது சாஸ்திரங்கள் உபதேசிக்கின்றன.

उभे पुण्यपापे विधूय ।

இப்பொழுது ஒரு கேள்வி பிறக்கும் ஆமாம், பாபம் இனிச்செய்யாவிடில் அதாவது ஜலத்தடியி லிருந்து அக்னியை நீக்கினுல், ஜலமானது அப்படியே குளிரவேண்டியதுதானே? எனவே இனி பாபம் செயேல் என்ருல் போதாதா? இனி, ஏன் ச்ரவணம், மனனம், நிதித்யாஸனம் செய்யவேண்டும். பதில் இருவிதமாக,

1 ஆமாம். அக்னியை நீக்கினுல், ஜலம் குளிர வேண்டியதுதான் ஆனுல் எப்பொழுது குளிருமென்பது உன் இஷ்டத்திலில்லை இதுவரை ஏறின உஷ்ணம் குறைய அவகாசம் வேண்டும் ஆனுல் உன் தாகம் பொறுக்கமுடியாமலிருந்தால் 'ஜலம் தானுகக்

குளிரட்டும்' என்று சொல்லமாட்டாய். நீயே உன் பிரயத்னங்களில் ஈடுபடுவதில்லையா! அதாவது, மற்றொருபாத்திரத்தில்விட்டு ஆத்திரேயோ பனிக்கட்டியில் வைத்தோ சீக்கிரம் குளிரப்பண்ணவேண்டுமல்லவா? அதேமாதிரியே இங்கும் பல ஜன்மங்களில் எண்ணற்ற பாபம் செய்துள்ளோம், எனவே அளவற்ற துக்கம், துன்பம், கொடுமைக்கு ஆளாயிருக்கிறோம். அவை எல்லாம் தீரட்டும். இனி பாபம் செய்யவில்லை என்றால் அது உனது நிச்சயத்திற்கே விட்டோம் கூடிய சீக்கிரமே இந்த கஷ்டங்களெலாம் தீரவேண்டுமென்கிறாய். ஒரு விதமான துன்பமோ துக்கமோ நீ அனுபவிக்காவிடில் வைத்தியனுக்கு இடமில்லை ஆனால் துக்கத்தின் அனுபவ மிருக்குமளவும், மருந்து அவசியமே.

மற்றொரு உபமானத்தில் நிலைக்கண்ணாடியில் குற்ற முள்ள பிரதிபிம்பமில்லாவிடில் உன் கண்களை மூட வேண்டாம். பிரதிபிம்பத்தைப்பார்த்து பார்க்கவேண்டா மென எண்ணம் உதித்தால் கண்களை மூடியே யாக வேண்டும். அதே மாதிரி துக்கமேயில்லாது சதா காலமும் அகண்டானந்தத்திலூறினால், உன் லக்ஷ்யம் பூர்த்தியாகிவிட்டது இனி ச்ரவணம் வேண்டாம் ஆனால் துன்பத்திற்கு ஆளாயிருந்தால் அதை நீக்கும் இச்சையுமிருப்பின், இங்கும் (ஜலத்தை சீக்கிரமாக குளிரப்பண்ணுவதுபோல்)சிரவணமனன நிதித்யாஸன சாதனங்களை, சீக்கிரமாக தாப நிவர்த்திக்காக, பாப மூட்டையை நீக்கி மோக்ஷம் சமீபிக்கக் கைக்கொள்ள வேண்டியதுதான்.

2 தவிர, ஜலத்தினடியிலுள்ள அக்னியை நீக்குவது போலென்றால் என்ன பொருள்? இதற்குப் பதில் சொல்ல இங்கு அக்னி யாது என்பதைப் புரிந்தே ஆக வேண்டும்? சாஸ்திரங்கள் பறையடிக்கின்றன,

अविद्याकामकर्मभिर्जन्म

நமது அனுபவங்களும் இதைப் புகட்டுகின்றன. மூன்று முட்டுக்கட்டைகள் நம்மை அடிமையாக்குகின்றன. இவைகளால் பல்வேறு சரீரங்களெடுத்து அவைகளுள் வசிக்கும்பொழுது நமது நிஜஸ்வரூபத்தை மறக்கிறோம் — அவை எவை? பின்வருவன—

1 நமது அகண்ட ஸ்வரூபத்தை அறியாமை.

2 அதினுலேற்பட்ட ஆசாபாசங்கள்.

3 அவ்வாசைகளைப் பூர்த்திசெய்ய எடுக்கும் மூடத்தனமான காரியங்கள்.

அறியாமையிலிருந்து ஆசைகள். ஆசையிலிருந்து கர்மா இந்த கர்மாக்களின் பலன்களை அனுபவிக்க பல ஜன்மங்களெடுத்து அங்கே புலன்களுக்கும் மனது புத்தி ஜகத் இவைகளுக்கும் அடிமையானோம். அடிமைத்தனத்தின் மூலாதார காரணமான அஞானம் ஒழிந்தாலொழிய அடிமைத்தனம் நீங்காது. அதாவது ஜலத்திற்கடியிலுள்ள அக்னியே அஞானம் சிரவணம், மனனம் நிதித்யாசனம் இவை மூலம் அஞானத்தை நீக்கினுலொழிய அந்த அக்னியை (உபமானத்திலுள்ள) நீக்கமுடியாது எனவே சிரவணம் முதலிய சாதனங்கள் அவசியமே.

## மார்க்கம்

திவ்ய அகண்ட ஞானத்திலிருந்து, ஆத்மா கீழே இறங்கியதால் ஏற்பட்டுள்ள அஞானம், துக்கம் இவை நீங்கி ஸ்வஸ்வரூபத்தை அடையும் மார்க்கத்தை வெகு விஸ்தாரமாக நமது வேதாந்த சாஸ்திரங்கள் வர்ணித்திருக்கின்றன ஸம்ஸ்கிருதபாஷையிலுள்ள 12 மாதங்களின் பெயர்களுங்கூட இம்மார்க்கத்தை தெரியப்படுத்தி இருக்கின்றன.

1 சைத்ரம் (Aries): ஆத்மாவின் விசித்ரமான ஸங்கல்பத்தைக் குறிக்கிறது.

बहु स्यां प्रजायेय – வெளியில் பல ரூபங்களில் வெளிப் படுவேன்.

2 வைசாகம் (Taurus): மேலும் மேலும் கிளை களாக வெளிப்பட்டவையின் தொடர்பும் பெருகுதலும்

3 ஜ்யேஷ்டம் (Gemini): द्वितीयाद्वै भयं भवति ச்ருதிவாக்கிய பிரகாரம் ஒருவருக்கொருவர் உரிமைகள் மேல் கீழ் என்பது விசேஷ மரியாதைகள் முதலியன.

4. ஆஷாடம் (Cancer): பொறுக்க முடியாத கஷ்டம் சண்டைகளாலான விபரீதங்கள். மனிதன் ஏன் கஷ்டங்களுக்குட்பட்டேனெனக் காரணத்தை அறிய விரும்புகிறுன்.

5 சிராவணம் (Leo): குருவிடமிருந்து கேட்பது. வஸ்துக்களின் தத்துவ விசாரணை.

6 பாத்ரபதம் (Virgo): ஆனந்த நிலை லக்ஷ் யத்தை விவரித்தல்.

7 ஆச்வினம் (Libra): अथ व्याप्तौ संघाते च ஸர்வ வ்யாபகத்வம் சரீரத்தினுள்ளே தியானத்திற்கு அழைக் கிறது. இந்த தேகத்தின் நிலை என்ன?

8 கார்த்திகம் (Scorpio): தோல்-சரீரம் வெளித் தோலே. சரீரம், ஆத்மா இவ்விரண்டுள் எதற்கு அடிமை?

9 மார்கசிர்ஷம் (Sagittarius): 'சீரியதைத்தேடு' ஈசுவரனைப்பார்.

இதுகாறும் சிரவணமும் மனனமும் விவரிக்கப் பட்டன. குருவினது அனுபூதியாலும் சாஸ்திரவிசாரணை யாலும் நமது புத்தி இந்த வேதாந்த ஸித்தாந்தமும் முறைகளும் சரியென ஒப்பிற்று. இது போதாது. கணக்கி லெழுதத்தொலையாத எடுத்த ஜனனங்களில் மோகத் தால் மயங்கி உண்டதே போகம் கொண்டதே கோல மென சார்வாக மார்க்கம் ஊடுருவியிருக்கிறது. முன்

வாஸனைகளின் பலத்தை அவ்வளவு சீக்கிரம் நாசம் செய்யமுடியாது. வாஸனை க்ஷயமாவதற்கு சரியான மார்க்கத்தை கடைப்பிடித்து இடைவிடாது மனனம் செய்தாற்றான் வாஸனையின் பலம்குறைந்து க்ஷயமாகும்.

உதா :— புதுவருஷம் பிறந்தாகிவிட்டது அதையும் நாம் கொண்டாடி விட்டோம். எனினும் சில நாட்கள் பழய வருஷத்தையே எழுதுகிறோம். ஏன் ? ஒருவருஷம் பூராவும் எழுதின பழக்கம் நம்மை விடமில்லை ! இந்தத் தப்புகளைத் திருத்துகிறோம். கடைசியாக புது வருஷம் நடப்பில் நன்கு ஞாபகத்திற்கு வருகிறது.

தார்மிக ரீதியிலும் இப்படியே. நல்ல வழக்கங்கள் நமக்குக் கஷ்டம் தருவதில்லை. ஆனால் சில சமயம் அவை பயனற்றுப் போனபின் ரசிப்பதில்லை அறியாமை யாலோ அஜாக்கிரதையாலோ கெட்ட சகவாசத்தாலோ கெட்ட பழக்கங்கள் நம்மை ஆட்கொண்டு துன்பம் விளைவிக்கின்றன. இவைகளை நீக்க கெட்டவைகளைத் திருத்தி நல்லதைப் பின்பற்றுவதே இதை நிதித்யாஸனம் என்பர்.

## निदिध्यासनं संततधाराप्रवाहरूप ज्ञानं

நமது மண்டைக்குள்ளும் இதயத்துள்ளும் மூக்கு முனைகளிலும் புகுந்திருக்கும் அஞானமஷ்டுவை இடைவிடாத பலத்த நல்லெண்ணங்களாலேயே சுத்தம் செய்யமுடியும். எனவே மூன்று மார்க்கங்கள்.

I ச்ரவணம் – ஆன்றோரிடமிருந்து ஸத்திய ச்ரவணம்

II மனனம் – சம்சயங்களும் நிரடுகளும் நீங்க

III நிதித்யாஸனம் – ஸித்தாந்தத்தை அனுஸந்தானித்து அனுபூதியில் கண்டு நம் பின் வாழ்க்கைக்கு ஒரு மாசக்திமாதிரி.

10 பௌஷம் (Capricorn) இடைவிடாது பருகுதல் நிதித்யாஸனம் உயிரிருக்கும்வரை கர்மா உண்டு ஞானி என்ன வேலை செய்ய ?

11 மாகம் (Aquarius) : 'பாவம் செய்யேல்' ஆனல் ஸகாமகர்மம செய்யலாமா ?

12 பால்குனம் (Pisces): அல்பகாரியம் செய்யாதே

उभे पुण्यपापे विधूय

பாபம் செய்வதுமில்லை. சுயநலத்திற்காக கர்மாவில் ஈடுபடுவதுமில்லை பலனை த் தேடிச்செய்யும் கர்மா வெல்லாம் அல்பமானவையே.

निष्कामबुद्धि, कर्तव्यबुद्धि, அல்லது ईश्वरार्पणबुद्धि

பலனை உத்தேசிக்காத கர்மம், செய்வனவென் றறிந்து செய்தல், ஈசுவரார்ப்பணமாகச்செய்தல்.

ஆத்மீக ஏணியில் ஏற ஏற படிகளுள இறுதிப் படி சேர்ந்ததும் நிஷ்காம கருமம் செய்வதுதான் மிஞ்சும்.

எனவே 12 மாதங்கள் முடிந்ததும் வட்டம் பூர்த்தி யாயிற்று. 13வது மாதமில்லையே.

தார்மிக—அதார்மிக பலம்

நம்முன் உள்ள சச்சிதானந்த சக்தியை அனுபூதியி லறிந்து அந்நிலையிலிருக்கவேண்டும். வேதங்கள் பறை யடிப்பதுபோல नायमात्मा बलहीनेन लभ्यः பயங்காளி ஒருகாலும் ஆதமானுபூதி பெருன். மனம் தடுமாறி யிருந்த அர்ஜுனனுக்கு ஸ்ரீகிருஷ்ணனது உபதேசம்.

[1] क्षुद्रं हृदयदौर्बल्यं त्यक्त्वोत्तिष्ठ परंतप ।

[2] सुखदुःखे समे कृत्वा लाभालाभौ जयाजयौ ।
ततो युद्धाय युध्यस्व नैवं पापमवाप्स्यसि ॥

1. கீதை 2-3. 2. கீதை 2-38.

(உனது ஹ்ருதய துர்பலத்தை விட்டு எழு. சண்டையிலிறங்கு. இன்பமோ துன்பமோ, லாபமோ நஷ்டமோ, ஜயமோ தோல்வியோ லக்ஷியம்பண்ணுமல் யுத்தத்திற்குச் செல். உனது தர்மத்தைச் செய். பாபம் உன் அருகில் வராது) ஆனுல் இந்த நமது (தேக, புத்தி, தார்மிக) பலத்தை நன்மை செய்யவே உபயோகிக்கவேண்டும் ஒருவருக்கும் துன்பம் செய்ய அல்ல உனது ஆசாபாசங்களை அடக்க பலத்தை அடைக ஏழையருக்கு உதவி செய் அல்லேல் இவ்வளவு தேகபலமிருந்தும் நீ பலஹீனனே கீதாசாரியனின் உபதேசம இதோ

[3] बलं बलवतां चाहं कामरागविवर्जितम् ।

(எந்த பலத்தில் பக்ஷபாதமும் மனக்கலக்கமு மில்லையோ, அதுவே தெய்வபலம்)

ஒரு இராட்சதனது பலமிருப்பது சிறந்ததே ஆனுல் இராட்சதத்தனமாக உபயோகித்தல் கொடுமையே எப்பொழுதும் உனது தேக, மானஸிக புத்தி வித்யை தனம் கௌரவம் ராஜ்யாதிகாரம் இந்த பலங்கள் அன்னியர்களுக்கு உதவியாகவும் அமைய வேண்டும்; கொடுங்கோலாட்சியாகக்கூடாது.

## ஸ்ரீகிருஷ்ணனும் சிசுபாலனும்

இத்தருணம் மாககாவ்யத்தில் சிசுபாலனது நாக்கில் கிளம்பிய தூற்றல்களை ஸ்ரீகிருஷ்ணன் எவ்வாறு பொறுத் தார் என்ற அழகிய வர்ணனை நினைவுக்கு வருகிறது. சிசுபாலனது ராஜதூதன் ஸ்ரீகிருஷ்ணனது மௌனமே சிசுபாலனது ஜயம என்கிறுன். சாத்யகி பதிலுரைக் கிறுன். என்ன மடத்தனமான உனது பேச்சு? சிசு பாலன் அடக்கமுடியாத மனக்கலக்கத்திற்கு வசமானதைப் பார்க்கிருய். ஸ்ரீகிருஷ்ணன் மனக்கலக்

3. கீதை 7-11.

கத்திற்குட்படாத சாந்த நிலையில் இருப்பதையும் பார்க்கிருய், எனவே ஸ்ரீ கிருஷ்ணன் சிசுபாலனை வென்றவரையும் வென்றதைப் பார்க்கவில்லையா? பின் இந்த சிறு பிராணியால் அவர் வெல்லப்பட்டது எங்ஙனம்? காரிய முடிவுகாலம் வரவே, (உலக க்ஷேமத்திற்காக) ஸ்ரீகிருஷ்ணன் ஒரு கலக்கமாவது மனவெழுச்சியாவது இல்லாமல் கடமையிற்கட்டுப்பட்டு சிசுபாலனை வதம செய்கிருர். இதுவே சாந்த (அடக்கப்பட்ட) தார்மிக, மானஸிக, தேகபலம் நமக்குரியது இதுவே. கிடைக்க முயலவேண்டும்.

सोऽहंभावेन पूजयेत् ।

ஈசுவர பூஜையில் நாம் செய்யவேண்டிய விதி அவனே நான என்ற பாவத்தில் பூஜை செய். இம் மாதிரி தன் மனதைத் திருப்பியவனை ஸ்ரீமத் பாகவததததில்,

सर्वभूतेषु यः पश्येद्भगवद्भावमात्मनः ।
भूतानि भगवत्यात्मन्येष भागवतोत्तमः ॥

(யாரொருவன் ஈசுவரனையும் தன்னையும் எல்லாவற்றிலும் பார்க்கிருனே ஈசுவரனிடத்திலும் தன்னுள்ளும் எல்லாவற்றையும் பார்க்கிருனே அவனே பாகவதோத்தமன். கீதையில் பகவானும்,

[1] वासुदेवः सर्वमिति स महात्मा सुदुर्लभः ।

(எல்லாவற்றையும் எங்கும் நிறைந்த ஸ்ரீ வாஸுதேவனுகப் பார்க்கிறவன் மிகமிக அரிது. இப்பேர்ப்பட்ட சிரேஷ்டனைக் குறித்து யமன் தன் தூதர்களிடம் சொல்கிருன்.

सकलमिदमहं च वासुदेवः परमपुमान् परमेश्वरः स एकः ।
इति मतिरचला भगवत्यनन्ते हृदयगते व्रज तान्विहाय दूरात् ॥

---

1. கீதை 7-19.

"தங்கள் ஹிருதயத்திலுள்ள ஈசுவரனிடம் எவர்களது மனம் பதிந்திருக்கிறதோ, தன்னையும் இந்த பிரபஞ்சம் எல்லாவற்றையும் வாஸுதேவ ஸ்வரூபமாகவும், பரமபுருஷனுயும் பரமேசுவரனுயுமுள்ள அந்த வாஸுதேவர் ஒருவர்தான் என்றும் அறிகின்றனரோ அவர்கள் அருகில் செல்லாதீர்கள். அந்த இடத்தை விட்டு வெகுதூரம் சென்றுவிடுங்கள். ஏனெனில் அவர்கள் மிருத்யுவைக்கடந்தவர்கள் நம் அதிகாரத்திற்கு உட்பட்டவர்கள் அல்ல" அவர்களுக்கு இந்த நிலை எப்படிக் கிட்டிற்று என்பதை இனி விசாரிப்போம். இந்த ஞான நிலையை அடைந்தபின் அவனுக்குச் செய்யவேண்டியது ஒன்றுமில்லை. ஏதாவது செய்தாலும் பற்றுதல் இருக்காது. இதுவரை சேகரித்து வளர்ந்து குவிந்த, எல்லா பாபங்களும் துக்கங்களும் கழிந்து விழுகின்றன. அவித்யை இல்லாதால் காமமில்லை. காமமில்லாததால் கர்மமில்லை. கர்மமில்லாததால் ஜன்மமில்லை. அதாவது ஜனனமரண ஸம்சார சக்கிரத்திற்கப்பால், மோக்ஷம் கிட்டியது.

ஆமாம். இனி கர்மம் உதிக்காது. முன்செய்த கர்மங்களென்னவாயின? வேதாந்த சூத்திரம் (4-1-13) பதிலுரைக்கிறது.

तदधिगम उत्तरपूर्वाघयोरश्लेषविनाशौ ।

(இதற்குப்பின் पातेतु வருகிறது) அதாவது ஞானியது ஸஞ்சிதகர்மா (மூட்டைகட்டியிருந்த கர்மா) எறியப்பட்டு நாசமாயிற்று அவனது आगामिकर्म புதிய கர்மா, நிஷ்காமமானதால் (பலனை உத்தேசிக்காததால்) ஒட்டவில்லை. அதாவது புனர்ஜென்மமெடுக்கவில்லை. பிராரப்த (ஆரம்பிக்கப்பட்ட) கர்மாவும் (முன் செய்த கர்மத்தில் எது இந்த ஜன்மத்திற்கு காரணமோ) விழுகிறது. ஏனெனில் பலன்களை அனுபவித்து ஆகிவிட்டது. உதாரணமாக இந்நிலை, எவனுக்கு பாங்கு சேமிப்பு நாசமாயிற்றே, புதிய சம்பாத்தியமில்லையோ,

கையிலுள்ள பணமும் சிலவாயிற்ருே அம்மாதிரி எனவே எந்த ஞானியது ஸஞ்சித கர்மா நாசமாயிற்ருே, ஆகாமி கர்மா இல்லேயோ பிராரப்த கர்மா கழிந்ததால் ஜன்ம மெடுக்க ஒரு கர்மாவுமில்லே. அவன் நிலே என்ன? வேதங்களில் பதில் :—

[1] तस्य तावदेव चिरं यावन्न विमोक्ष्येऽथ संपत्स्ये

(ஈசுவரனுடன் ஐக்கியமாவதில் தாமதம் அவனது பிராரப்த (ஆரம்பிக்கப்பட்ட) கர்மா கழிகிறவரைதான்.

[2] न तस्य प्राणा उत्क्रामन्ति ।

(அவன் செய்யவேண்டிய கருமமில்லாததால் அவனது மூச்சு வேறுலகிற்கு கோண்டுபோவதில்லே)

अत्र ब्रह्म समश्नुते ।

ஆனால், அவன் இங்கேயே ஸர்வவல்லப ஸர்வவியாபக ஈசுவரனுள் ஐக்கியமாகிருன்)

வ்யவகார உலகிலிருந்து ஒரு உதாரணம் விடுதலே யடையாத ஒரு கைதி ஒரு ஜயிலிலிருந்து மற்ருெரு ஜெயிலுக்கு மாற்றப்படும்பொழுது ஒரு போலீஸ்காரன் அவனுடன் செல்லுகிருன் விடுதலேயடைந்தால் போலீஸ் பந்தோபஸ்து நின்றுவிடுகிறது. அம்மாதிரியே ஜீவாத்மா பந்தத்திலிருந்து விடுதலேயாகாதபொழுது ஒரு தேக ஜெயிலிலிருந்து மற்ருென்றுக்குச் செல்லுகிறது. மூச்சு (போலீஸ்காரன் மாதிரி) அவன் பின் செல்லுகிறது. ஆனல் விடுதலேயடைந்த பிறகு மூச்சு அவன்பின்சென்று ஓரிடத்திற்கும் கொண்டுபோவது இல்லே. ஏனெனில் போகுமிடமில்லே. அகண்ட பரமாத்மாவோடு ஐக்கியமாகிவிட்டது.

நமது புராதன மஹரிஷிகள் கண்டமாதிரி எவ்விடத்திலிருந்து வந்தோமோ அவ்விடம் (ஈசுவர

1. சாந்தோக்யம் 6-14. 2. பிருஹதாரண்யகம் 4-4

னிடம்) செல்லுகிறோம். நாம் ஆகாசம், வாயு, அக்னி, ஜலம், பூமி இவை மூலம் விழுந்தோம். இப்பொழுது (जनिविपरीतक्रमेण மஹாசாந்த முனியான ஸ்ரீசுவாமி ஸதாசிவேந்திர சரஸ்வதீ உபதேசிப்பதுபோல) திரும்பிப் போகும் முறையில், திரும்பவும் நமது கைவல்யஸ்திதியை அடைகிறோம். இப்படி ஜீவாத்மாவின் சுற்று முடிகிறது. மானுஷ்ய ஜன்மம் ஒன்றிற்கே உரித்தான தியானம், நிதித்யாஸனம் நல்ல நெறியில் நடப்பது என்ற பேருரிமையை உபயோகப் படுத்துகிறோம். மற்றப் பிறவிகளோ (பக்ஷிகள், மிருகங்கள், பூச்சிகள் ஏன் தேவர்களுட்பட) போக க்ஷேத்திரங்களே. முன் கர்மத்திற்கேற்ப கட்டுப் பட்டவை. மனுஷ்ய தேகமோ கர்மக்ஷேத்ரம். இங்கே முன்ஜன்ம, இந்த ஜன்மபலன்களை அனுபவித்து, புதிய பிரவ்ருத்தியிலீடுபட்டு மோக்ஷ வாசலில் நுழை கிறோம். அரிதரிது மானிட ஜன்மம் எனவே இந்த ஜன்மத் திலேயே நமது பார்வையை உள் மறைந்த பரமாத்மா விடம் தாரணம் செய்வோம். இது செய்வோமாயின் சரியான வழியே சென்று பரம்பொருளை அடைகிறோம் ஏதோ உலகில் கடமைகளைச் செய்கிறேன் சமயம் கிடைக்காததால் இந்த சீரிய காரியங்களை செய்ய முடியாதென்று வீண் சாக்குப்போக்கு சொல்லாதே வேதாந்தம் உன் கடமைகளை விட்டு விட்டு இந்த மார்க்கத்திற்கு வா வென்று சொல்லவில்லை. ஆனல் நமது கடமைகளை திறமையுடன் செய்து அதே சமயம் மனதை உட்புறம் திருப்பச்சொல்லுகிறது! இதே ஒரு அழகு ஜனக மகாராஜன் கடமைகளைச் செய்தாரே. ஒரு சமயமாவது ராஜ்ய தர்மத்தை விடவில்லை அதே சமயம் தன் மனதை பரமாத்மாவிடம் நிலைநிறுத்தினர். இதுவே ஈசுவர ஜீவ ஐக்கியத்திற்கு மார்க்கம்.

## உலகமே நாடகமே

ஒரு கேள்வி மட்டும்—"ஆமாம்-எப்படி முடியும்? இது முன்கையாண்ட விவரண ஹைதுக முறைகள்

மூலம், நாம் ஸத், சித், ஆனந்த ரூபமென உணர்ந்து சாவு அறியாமை துக்கம் இவை எல்லாம் மேலே படர்ந்த மாயையே யெனினும் பிராரப்த வசத்தினுலே தேக கஷ்டங்களையும் துன்பங்களையும் அனுபவிக்கும் பொழுது எப்படி தனது ஸ்வரூப ஆனந்தத்தை அனுபவிக்கமுடியும்? இந்த பிரச்னைக்கு உத்தரம் சொல்லியே ஆகவேண்டும், ஏனெனில் அந்த திருப்தி யானபதிலிலேயே ஜீவன்முக்தி என்ற நிலையைப் புரிய முடியும். மரணத்திற்குப் பின்னுள்ள விதேகமுக்தியை விவரிக்கமுடியும். ஆனல் முக்தி ஜீவனிருக்கும்பொழுதே அதாவது நமது துன்பங்கள், கஷ்டங்கள், சோதனைகள் இடுக்கண்களிடையில் எப்படி கிட்டுவது? இதற்கு பதில் பகவான் வித்யாரண்யரது பஞ்சதசியிலிருந்து கிடைக்கிறது.

मार्गे गन्त्रोर्द्वयोः श्रान्तौ समायामप्यदूरताम् ।
जानन् धैर्याद्द्रुतं गच्छत्यन्यस्तिष्ठति दीनधीः ॥

வெகுதூரம் நடந்து களைப்படைந்த இரண்டு பிரயாணிகளில் ஒருவனுக்கு சேருமிடம் சமீபமெனத் தெரியும் தைரியத்தை கடைப்பிடித்து தன் ஆயாசத்தை சகித்து மேலும் செல்லுகிருன். தன் வீடடைந்து கால் கையை நீட்டி உறங்கி புனர்பலத்தைப் பெறுகிருன். மற்றவனே சேருமிடம் சமீபமென அறியாமல் இன்னும் வெகுதூரமென்று எல்லையற்ற பிரயாணமென எண்ணி எண்ணி நம்பிக்கையை இழந்து மேல் அடியெடுக்க மறுத்து துயரத்தில் மூழ்குகிருன்.

இந்த விஷயத்தை நன்கு தெளிவுபடுத்த நாம் பகவான் ஸ்ரீராமரது கதையை நாடகரூபமாக நடிப்பதைப் பார்க்கப்போகிறோம் எனக் கொள்வோம். அங்கு ஜகந்மாதாவாக நாம் வணங்கும் பிராட்டி பகவதீ சீதாதேவியை ராக்ஷஸ ராவணன் மிரட்டி, அப்பிராட்டி அழுவதைப் பார்க்கிறோம். இந்தக் காக்ஷியை நாம்

மறுபடி மறுபடி என்று ஆவலுடன் பார்த்து அனுபவிக்கிறோம். ஆனால் மற்றோரிடத்தில் தெருவில் போகும் போது நமக்குத்தெரியாத ஒரு மாதை ஒரு அயோக்கியன் மானபங்கம் செய்தால் நாம் ஓடி அந்த முரடனை உதைக்கிறோம்.

இந்த இரண்டு காக்ஷிகளிலும் நமது கண்கள், காதுகள், இதர அவயவங்களும் அனுபவித்தது ஒன்றானாலும் வித்தியாஸமுண்டு. முதல் காக்ஷியில் நாமொன்றும் செய்யவில்லை. இரண்டாவதில் ஏன் அவ்வளவு ஆத்திரம்? இவைகளின் காரணமென்ன? ராவணன் விரட்டி ஸீதாதேவி கதறுகிறது உன் புலன்களுக்கு எட்டினாலும் ராவணன் ஸீதா வேஷம் போட்டோரை (உன் மாமனைவும் தம்பியாகவும் கூட இருக்கலாம்.) உண்மையான ராவணன் சீதையில்லை என உன் மனதுக்குத்தெரியும் இந்த நாடகத்தைப் பார்க்கவே பணம் கொடுத்து டிக்கட்டும் வாங்கினாய் இரண்டாவது கட்டத்தில் இருவரையும் அயோக்கியனையும் குற்றமற்ற ஸ்திரீயையும் உனது புலன்கள் மூலம் பார்த்து உண்மையென நம்புகிறாய்! இரண்டிலும் பார்ப்பது ஒரேமாதிரியாயிருந்தாலும் ஒன்றை உண்மை என நம்புகிறாய். மற்றதை உண்மையில்லையென்று நினைக்கிறாய் இதுதான் இரண்டுக்கும் உள்ள வித்யாஸம்.

இந்த உபமானத்தை சார்வாகனுக்கும் வேதாந்திக்கும் உள்ள வித்தியாசங்களையறிவதில் உபயோகிப்போம். இருவரும் புலன்கள் மூலம் ஒரே காக்ஷியையும் சப்தங்களையும் அனுபவிக்கின்றனர். ஆனால் இந்த முக்கிய வித்தியாசம்:— த்வைதி தனது கஷ்டங்களும் துன்பங்களும் உண்மையே என நம்பி தைரியத்தை இழக்கிறான். வேதாந்தியோ தான் அனுபவிப்பதுபோல் இருக்கும் கஷ்டங்களும் துயரங்களும் நாடக ராவணன் சீதை மாதிரி மித்யையென்றுணர்ந்து தனது புலன்களது அனுபவமிருக்கினும் அசைவற்று சந்தோஷமாக திருப்தனாகவிருக்கிறான்,

## ராஸ - லீலை

பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் உள்ள சம்பந்தத்தை பகவான் ஸ்ரீகிருஷ்ணனது ராஸலீலையிலிருந்து அறிந்துகொள்ளலாம். எவ்வளவோ அறிவிலிகளாலும் விஷமக்காரர்களாலும் துரர்த்தம் பண்ணப்பட்டாலும், இந்த அரிய, பெரிய நித்ய ஆனந்த நடனம் நடந்து கொண்டேயிருக்கிறது ஸ்ரீமத் பாகவதத்திலுள்ள ராஸ லீலையின் ஒரு திவிலையின் நிழலே பைபிளிலுள்ள ஸாலமனது பாட்டுகள் விவாமாக இங்கு ராஸ பஞ்சகத்தை ஆராயவில்லை அதின் சாராம்சமே ஆராயப் படுகிறது வெகு ரமணீயமாக எப்படி பிரம்மாண்டத்தில் பகவான் நடிக்கிருரென்பதைப் படிக்கிரோம் பகவானது நடனத்தை இதோ வர்ணிக்கிருர்.

अङ्गनामङ्गनामन्तरा माधवो
माधवं माधवं चान्तरेणाङ्गना ।
इत्थमाकल्पिते मण्डले मध्यगः
संजगौ वेणुना देवकीनन्दनः ॥

ராஸமண்டலம் (நடன அரங்கம்) கிருஷ்ணன் ஈசுவரன் ஜகத்திலுள்ள கோடிக்கணக்கான ஜீவர்கள் நாயக நாயகீ பாவத்தில் கோபிகள் ஒவ்வொரு கோபியின் அருகில் ஒரு பாலகிருஷ்ணன், வட்டத்து நடுவிலும் பாலகிருஷ்ணன், நடனராஜா நர்த்தனத்தில் புல்லாங்குழலில் தேவகானம் பாடுகிருர். எனவே ஜீவன்கள் சோடிகளாயினும் ஈசுவரன் ஒன்றே. உன்னைச் சுற்றியும், பக்கங்களிலும் முன்னும் அவனை கோபிகள் மாதுரி அனுபவிக்கிரோம். நடனமாடும் பொழுது ‘ यथार्भकः स्वप्रतिबिम्बविभ्रमः

கோபிகள் ஆணவமடையவும் எவனுடன் ஆடிப் பாடி விளையாடினரோ, அவன் உடனே மறைகிருன்

प्रशमाय प्रसादाय तत्रैवान्तरधीयत ।

வருந்தி தேம்பித் தேம்பியழுது தேடித் தேடி இருளையே எங்கும் காண்கின்றனர். வெளித் தேடலை நிறுத்தி, தன்னையே மறந்து, சரணாகதியடைந்து,

तन्मनस्कास्तदालापास्तद्विचेष्टास्तदात्मिकः ।

அவர்களது நினைவு அவனிடமே அவர்கள் பேச்சு அவனைப் பற்றியே அவர்களது செயல்கள் அவனது பிரதி ஒலியே. தனித் தன்மையை இழந்து அவனிடம் ஐக்கியமாகின்றனர். பின் என்ன?

तासामाविरभूच्छौरिः स्मयमानमुखाम्बुजः ।

திரும்பவும் வருகிறார். புன்சிரிப்புடன், அவர்களைச் சுற்றி இங்கும் அங்கும் எங்கும் தனது திவ்ய தேஜோமயமான நடனமாடுகின்றார். இதன் மர்மம் எவருக்கும் புலப்படும். அகங்காரம் வரவே ஈசுவர தரிசனம் மறைகிறது. நள்ளிருட்டே மிஞ்சுகிறது. பின் நம் அகங்காரத்தை விட்டு அவனுள் பூர்ண சரணாகதி அடைந்தால் அவரை எங்கும் பார்க்கிறோம். நம்முள்ளும் பாடி ஆடி, ஒரே ஆனந்தமயத்தினுள் புகுகிறோம் அதாவது நரன் இங்கு மாம்ஸமயக் கூண்டிலேயே நாராயணன் ஆகுகிறான்! இன்னுமொரு முறை சொல்லவோ? பரம்பொருளுடன் ஐக்கியத்திற்கு மேல் நிலையுளதோ? வேதாந்தமார்க்கத்திற் கெளிய மார்க்கமுளதோ?

## முடிவுரை

இம்மாதிரியானதே வேதாந்தமும் அதின் சீரிய உபதேசங்களும், பரம்பொருளும் அதை அடையும் மார்க்கமும் பல ஆயிரம் ஆண்டுகளுக்குமுன் மஹரிஷி வேதவியாஸரால் சூத்திரங்களாக அரிய உபதேசங்கள் அளிக்கப்பட்டன. கலியுகத்தில் சுமார் 1155 வருஷங்களுக்குமுன் பாமரர்களுக்கும் புரியும்படியாக ஸ்ரீ ஆதிசங்கரபகவத்பாதாள் மஹரிஷி வேதவியாஸரது ஸூத்திரங்களுக்கு (பாஷ்யம்) உரை எழுதினார்.

# Books by the same author



| | | | |
|---|---|---|---|
| 1. | From a Rural School-Window | ... | 1923 |
| 2. | South Indian Gilds | ... | 1925 |
| 3. | The Madura Sourashtra Community | ... | 1927 |
| 4. | The League of Nations Covenant | ... | 1933 |
| 5, | International Law - First Book by an Indian | ... | 1937 |
| 6. | Indian States and Responsible Government | ... | 1939 |
| 7. | Indian States | ... | 1942 |
| 8. | Treaties, Engagements and Sanads | ... | 1942 |
| 9. | A Hindu Jurist in the West | ... | 1946 |
| 10. | Lectures on Public International Law | ... | 1950 |
| 11. | Studies in International Law | ... | 1952 |
| 12. | From a Law College Window | ... | 1955 |
| 13. | Gathered Flowers | ... | 1955 |
| 14. | Shivananda - the Dynamic Monk | ... | 1958 |
| 15. | Hindu Jurisprudence | ... | 1962 |
| 16. | Tamil Mysticism | ... | 1962 |
| 17. | Reminiscences of a Jurist | ... | 1962 |
| 18. | Respect for Law and Order | ... | 1970 |
| 19. | Thambrapurni Pada Yatra | ... | 1970 |
| 20. | Kodahanallur Sundara Swamigal | ... | 1970 |
| 21. | S. Srinivasa Iyengar - Govt. of India | ... | 1972 |
| 22. | Advaita Bodha Dipika - Tamil | ... | 1972 |
| 23. | Manu and Thiruvalluvar | ... | 1973 |
| 24. | Kathi Munai Padhai - Tamil | ... | 1975 |

